HOME SERIES

THE STORY OF

# PACHAI AMMAL,

THE SICK-NURSE.

நோயாளிகளுக்குச் சிகிச்சா உபசாரஞ்
செய்த
பச்சையம்மாள் கதை

MADRAS
1886

HOME SERIES.

# THE STORY OF

# PACHAI AMMAL,

## THE SICK-NURSE.

BY

V. KRISHNAMACHARIAR,

*Fellow of the University of Madras.*

நோயாளிகளுக்குச் சிகிச்சா உபசாரம் செய்த

## பச்சையம்மாள் கதை.

"அன்பின்வழிய துயிர்நிலை ; அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு."—குறள்.

Madras:

PRINTED BY ADDISON & Co., MOUNT ROAD,

1886.

# DEDICATION.

---

THIS LITTLE STORY

AIMING AT THE SPREAD OF PRACTICAL INFORMATION ON

SICK-NURSING

AND THE DISSEMINATION OF SANITARY KNOWLEDGE

IN NATIVE HOMES,

IS

Respectfully Dedicated

(BY PERMISSION)

TO

HER EXCELLENCY LADY GRANT DUFF, C.I.

WHO HAS ESTABLISHED FOR HERSELF A LASTING CLAIM TO THE GRATITUDE AND ESTEEM OF ALL MADRAS BY HER EARNEST EFFORTS TO PROMOTE FEMALE EDUCATION AND TO LESSEN THE PHYSICAL SUFFERING OF

WOMEN IN SOUTHERN INDIA.

# NOTE.

This story of a sick-nurse is intended as a small contribution to that kind of Vernacular literature, the want of which is much felt in native households on matters of sick-nursing and sanitation, and as one of the connecting links between the mental training given in Native Girls' schools and the practical duties of a woman's life. The plot of the story is very simple, as may be seen from the page of Contents, and the Recipes and instructions given in the story are based on reliable sources.

The practical maxims at the end of the book are a collection of the aphorisms and proverbs current in and about the sick-room in Native Homes in the Tamil country, and these familiar sayings have long served among the Dravidian people as the unwritten language of morality, and as decisive as logic for generations, admitting of no doubt or dispute as to the advice they contain or the rules they enunciate.

A great difficulty has been felt in the matter of Illustrations for this book and some others combining entertaining story with useful information, and suited for Home reading and Libraries of Girls' schools as well as for Prizes, which otherwise could have long ere this been published. The only woodcut that could be locally procured is that of the frontispiece, intended to illustrate the description given in the story at pages 16 and 17 as to "How to move the sick from her bed without causing her pain." If this story in Tamil receives a fair share of public favor, a Telugu version will be brought out for the use of Families and Schools in the Telugu country.

This book has been dedicated by special permission to Lady Grant Duff in behalf of the women of this country, to whose gratitude and esteem Her Ladyship has established a lasting claim by throwing the weight of her influence in favor of Female education generally, and in particular of the benevolent movement to provide for them suitable Medical aid by training Native Nurses and female Medical Practitioners.

*December* 1886.

# CONTENTS.

# அட்டவணை.

---



நோயாளியைப் படுக்கையினின்று
தூக்கிவிடும் உபாயம்.

[15-16-ம் பக்கங்கள்.]



நோயாளிகளுக்குச் சிகிச்சா உபசாரம்செய்த

# பச்சையம்மாள் கதை.

புரட்டாசி மாதத்தில் ஒருநாட் காலையில் மப்பு மந்தாரமின்றி இளவெயில் உதிக்க, கடற்காற்று உலாவ, சாலைகள் வீதிகளில் போவார் வருவாருக்கு இவையாவும் இன்பமாயிருந்தன. நகரவாசிகளுக்கு இந்தச் சுகத்துடன் சோலைகள் தோப்புகள் மலிந்தநாட்டில் உலாவும் சுத்தமான காற்று நலமும் இருக்குமானால் ஒன்றால் ஒன்றும் குறைஇல்லை யென்று சொல்லத் தகும். சென்னப்பட்டணத்துத் தங்கசாலை வீதியில் நான் அன்று காலையில் இஷ்டர் ஒருவனைக்காணப்போனேன். போகும் போது அவ்வீதியினின்று பிரியும் முடுக்குத் தெரு ஒன்றில் ஒரு மனுஷி திரும்பினாள். அது பகலில் முப்பது நாழிகையும், இரவில் பன்னிரண்டு நாழிகை வரையிலும் ஓயாமல் ஜனம் அடர்ந்து செல்லும்தெரு. அந்த மனுஷி விலை. உயர்ந்த ஆடை ஆபரணமுதலிய ஆடம்பரங்களில் விருப்பமுள்ளவளாகத் தோன்றவில்லை. அவள் கஜம், மூன்று அணா விலைதாளும் சீமைத்

தோம்புச்சேலை உடுத்திருந்தாள். அவள் பூண்டிருந்த ஆபரணம் கழுத்தில் முந்நூல் காதில் சாதாக்கம்மல் ஆக இம்மட்டுந்தான். வஸ்திரபூஷணாதிகளின் அலங்காரத்தைக்கண்டு எவரும் அவளைத் திரும்பிப்பார்க்கவில்லை. ஆனாலும் திரும்பிப்பார்த்த ஸ்திரீகள் சிலர் அவள் முகத்தில் விளங்கிய இனியகுணத்தையும் மட்டுமரியாதையையும் கண்டு கிட்டப்போனார்கள். அவள் குணம் குறிகோலங்களைக் கண்டவுடன் அவர்களுக்கு இயல்பாய் அவளிடத்தில் பிரீதி உண்டாயிற்று. நல்ல வயதில் அவள் அழகைக் காண்பவருக்கு ஆயிரம் கண் வேண்டும். காண்பவர் கண்ணையும் கருத்தையும் கவரும் அபூர்வசுந்தரி. பின்பு நாட்பட நாட்பட ஆபத்தின்மேல் ஆபத்து, துக்கத்தின்மேல் துக்கம், ஒரு துயர் ஒழிய மறுதுயர் நேரிட்டதனால் அவள், முகக்களை குன்றி, மேனி கறுத்து, கடற்கரைக் கருமணல்போல அழகிய கூந்தல் வயது முதிருமுன் நரைத்துப்போயிற்று. கூந்தல் நரைத்தும், இனிய குணத்தால் முகத்தில் விளங்கிய புன்னகையோ அன்றிருந்தவண்ணம் இன்றும் அழியாதிருந்தது. அன்றியும் சம்பவித்த ஆபத்து விபத்துகளை அவள் சகித்து, இவ்வுலகில் வாழ்வு தாழ்வு, இன்பதுன்பம் இவைகள் மனிதர் பங்கென்று எண்ணித் துக்கம்போக்கி, பதைப்பற்றிருக்க வழக்கப்பட்டதனால், முகத்தழகு குறையக் குறைய, அதற்கு முன் இல்லாத காந்தி உண்டாயிற்று.

பொய்ம்மையிலும் மெய்ம்மையே புதுமையென்று பலரும் சொல்ல எத்தனைமுறை காதாரக் கேட்டிருக்

கிறேம். பார்க்குமிடத்தில் அப்படித்தான் இருக்கின்றது. அங்கங்குள்ள மனிதர்களுடன் பழகி, அவரவர் அன்றன்று அனுபவிக்கும் இன்ப துன்பங்களைப் பற்றிய வரலாற்றை அவர்கள் வாக்குமூலமாய்க் கேட்போமானல், அவை ஒன்றுக்கொன்று அதிசயமென்று சந்தேகமில்லாமல் அறிந்து, நாமும் அதிசயிப்போம். அன்றியும் தம்மால் அன்புகூர்ந்து, தமது திருநாமத்தை உச்சரித்து ஓலமிட்டு, திருவடிகளைத் தொழும் அடியாருக்கு எவ்வகைத் தீமையையும் அறுதியில் நன்மையாக முடிப்பவர் நம்மைச் சிருஷ்டித்து ரக்ஷிக்கும் ஞான பரிபூரண கருணாநிதியாகிய கடவுளென்று திருஷ்டாந்த பூர்வமாய் அறிவோம்; அவர் திருநாமத்தை மானிட ஜன்மம் எடுத்த யாவரும் கீர்த்தனம் செய்வது கடன். மேலே குறிப்பித்த ஸ்திரீயின் பெயர் பச்சையம்மாள். இவள் சிறு பருவத்தில் ஒரு விதத்திலும் குறையின்றி உல்லாசமாகவே யிருந்த ரூபவதி. அப்பால் தக்க பருவம் அடைந்தபின் குடும்ப நிர்வாகி, ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டு, மனைமாட்சி அனைத்து முடையவளென்று உற்றார் பெற்றார் மற்றோரால் மதிப்படைந்து, புத்திரர் புத்திரிகளைப் பெற்றெடுத்துச் சீராட்டி நல்வழிப்படுத்தி, இடம் பொருள் ஏவல்களில் எக்குறையுமற்றிருந்தவள். செல்வராகும்பொழுது பெரும்பாலும் தெய்வத்தைமறந்து விபரீதத் துறைகளில் இறங்குவது மனுஷர் இயற்கை. இந்த விபரீதம் பச்சையம்மாளுக்கு எவ்வளவும் இல்லை. மேற்சொல்லிய நல்வரங்களைக் கிருபை கூர்ந்து அளித்த தயாமூர்த்தியை அவள்

அல்லும் பகலும் அன்புடன் நினைவில் இருத்தித் துதித்து வணங்கி வழிபட்டு வந்தவள். ஆதியோடந்தமாக இதையெல்லாம் அறிந்தவர்கள் பின்னிட்டு அவள் குடும்பத்துக்கதிபதி, குலக்கொழுந்துகளாகிய புத்திரர் புத்திரிகள், குற்றேவல்செய்வோர், கைப்பொருள், ரூபம் முதலான எல்லாவற்றையும் இழந்து, முதுமைப்பருவத்தில் தாங்குவார் இரங்குவார் எவருமின்றி, கைப்பாடுபட்டுக் கஷ்டஜீவனம் செய்வதைக் கேள்விப்படுவார்களானால், ஐயோ, இது என்ன புதுமை, யார் செய்த தவக்குறை, இவ்வுத்தமி எவருக்கும் தீங்கு செய்தவள் அல்லவே, எவர் பொருளையும் இச்சித்தவள் அல்லவே, செல்வப்பொருள் பெற்றால் மதிமயங்கிக் கடவுளைத் தொழாதிருந்தவள் அல்லவே, என்பதை நினைத்து வருந்துவார்கள். மனுஷர் வருந்திப் பயன் என்ன. திருவுளத்தின் செயலுக்கு நிவர்த்தி ஏது? குடும்பத்தில் மேற்குறித்த உபத்திரவங்கள் நேரிட்ட காலத்தில் பச்சையம்மாளுக்குச் சொல்லுக்கடங்காத் துயர் உண்டாகியும், வரவர அவள் துயர் ஒழிந்து மனம் தேறினாள். எந்த வரமும்தந்த கடவுளுக்கு அதைத் திரும்பப் பறித்துக்கொள்ளவும் சக்தி உண்டு. கடவுள் சித்தம் எனது பாக்கியம், என்று நெஞ்சார வாயார நினைக்கவும் சொல்லவும் பழகி அவசரப்படாமலிருந்தாள்.

ஜனத்தொகை பெருத்த சென்னை முதலிய ராஜதானிகளில் நாகரிகமும் சீர்திருத்தமும் தலைப்பட்டிருக்கும் தற்காலத்திலும் சற்றேறுடுக்கமான பின்

வீதிகள் முடுக்குத் தெருக்களில் குப்பைகள் சேர்ந்து துர்க்கந்தம் உண்டாவது அதிசயம் அல்லவே. இப்பொழுதே இந்தக் கதியானல், நகரசுத்தி ஏற்பாடு இல்லாத காலத்தில் பச்சையம்மாளுக்கு விவாகம் முடிந்தபொழுது மேற்சொல்லிய வீதிகள் சந்துகளின் சீரழிவைச் சொல்லவும் வேண்டுமோ! வீதிகளில் வீடுகளை நெருங்கக் கட்டியிருந்தார்கள். குடிகள் அடர்ந்திருந்தனர். சாக்கடைச் சேறுபோகச் சுத்தி செய்யும் வழக்கம் சற்றுவது இல்லை. தடையின்றித் தாராளமாய்க் காற்று உலாவ வெளிஇல்லை. இப்படி இருக்கையில், சுரம், அம்மை, வாந்திபேதி முதலிய கொள்ளை நோய்கள் கண்டு உக்கிரமாய் வியாபித்துப் பிராணசேதம் செய்வதற்குத் தடை என்ன? இந்த ரோகங்கள் ஆயிரம் பதினுயிரம் பேரைவாரிக்கொண்டு போயின; எவருக்கும் பயம் உண்டாக்கும் இக்கொடிய உபத்திரவத்தை எண்ணி அப்பொழுதுதான் துரைத்தனத்தார் சற்று விழித்து, நகர சுத்தியானது ஜன சௌக்கியத்துக்கு இன்றியமையாதென்று கண்டு, முயற்சி செய்யத் தொடங்கினர்கள்.

பச்சையம்மாளுடைய கணவன்பெயர் ரத்தினவேலு. மேல்குறித்த கொள்ளைநோய்கள் மேலிட்டகாலத்தில் ரத்தினவேலு வீட்டிலும் அழகான பெண்குழந்தை ஒன்று ஐந்துவயதில் விஷசுரம் கண்டு ஐந்தாறுதினத்தில் இறந்துபோயிற்று. அதற்குமுன் அந்தக் குடும்பத்தை வியாதி யொன்றும் எட்டிப் பார்த்ததில்லை. அடுத்து ஒரு வாரத்துக்குள் ஆண் குழந்தையும் ஒன்று

அந்த நோயின் வாய்க்கு இரையாயிற்று. அது இறந்து போன அன்றையதினமே பின்னும் ஒரு குழந்தை மரணமடைந்தது. பச்சையம்மாள்பெற்ற பிள்ளை களில் அந்தக் கண்டத்துக்குத் தப்பிப் பிழைத்தது ஆக ஒன்று. அப்பால் நாலைந்துமாசம் அந்தப் பசுமையான குடும்பத்தில் வியாதி உபத்திரவம் இல்லை. ரத்தினவேலும் பச்சையம்மாளும் கண்ணீர் வெள்ளம் பெருகத் தாம் உடல்மெலிந்து உள்ளம் கசிந்து அழுத குரல் கேட்டுத் தெய்வம் சித்தம் இரங்கி, தமக்கு ஒரு பிள்ளைப் பிச்சை கொடுத்ததென்று சற்றே ஆறித்தேறி யிருந்தார்கள். இப்படி யிருக்கையில் அவர்கள் ஒன்று எண்ண, தெய்வம் ஒன்று எண்ணிற்று. தோப்பில் உள்ள மரம் எல்லாம் அடியற்றுவிழ, ஒன்றே யொன்று காற்று மழைக்குத் தப்பி நிற்பதுபோல, குடும்பத்தில் உள்ள செல்வக் குழந்தைகள் இறக்க, பூங்காவனம் என்னும் பெண் ஒன்றுமாத்திரம் வியாதிக்குத் தப்பியதென்று அவர்கள் நினைத்தது வீண். பூங்காவனத்திற்கு வந்த சுரநோய் மாறவில்லை; அது நாபியில் அடங்கியிருந்தது. சூதுள்ளவனையும் ரோகத்தையும் ஒருபோதும் நம்ப லாகாது. சுரத்தின்வித்து எலும்பிற்குள் பதிந்து, அதன்விஷம் உடலில் எங்கும் ஊறியிருந்தது. அதனால் தாய்செய்த உபசாரம், பக்குவங்கள் ஒன்றும் பலிக்க வில்லை. பூங்காவனமும் சகோதரர்களைப்போலச் சிறு வயதிலேயே இறந்துபோய்விட்டாள். அப்பால் பச்சை யம்மாளுக்கு இவ்வுலகப் பற்று எவ்வளவும் இல்லை. அவள் ஒவ்வொரு வேளையில் பிள்ளைகளை நினைத்து,

பெற்ற தாயை மறந்து பறந்த பாவிகளே என்று அலறி யழுவாள்; வாயில் அடித்துக்கொண்டு மயங்கித் தரையில் விழுவாள், கண்ணீர் அருவி பெருகக் கதறுவாள், ஏங்கித் தன் ஆவியைப் பறிகொடுத்தவள் போலத் தேடித் திரிந்து சுழலமிடுவாள். அவள் இவ்வாறு வருந்தியது கண்டு, ரத்தினவேலு மரண அவஸ்தைப்பட்டான். அவன் உடல் நாளுக்குநாள் மெலிந்து ஒடுங்கிற்று. ஆயினும் கடவுள் கடாக்ஷித் தருளிய தன் வாழ்க்கைத் துணைவனைத் துக்கசாகரத் தில் விழுத்தி வருத்திக்கொல்வது தொலையாப் பழி யென்று பச்சையம்மாள் துக்கத்தை மறந்து, திரு வுளத்தின் செயல் எதுவோ அதுவே தனக்கு முத்தி யென்று மனந்தேறி, கணவனையும் தேற்றினாள். அவளுடையபக்தியையும் உத்தம நெறியையும் கண்டு, ரத்தினவேலும்முத்தி நெறியை நித்தம் நினைத்துப் பக்தி வைராக்யனானான். தமது அருளை நாடித் தம்மைச் சார்வாரைத் தாயினும் அதிகப் பரிவுடன் அணைத்து அனுக்கிரகிக்கும் சர்வ பரிபூரணருடைய பாதகமல த்தை அவன் மனக்கருத்தால் விடாது பற்றியிருந்தான். தமது அடியாரைக் கடவுள் இரக்ஷிப்பார் என்று உறுதி உண்டாக உண்டாக பச்சையம்மாளுக்கு மனோ திடம் அதிகப்பட்டது. கடவுள் நம்மை வருத்துவது கொல்லவல்ல, பொல்லாக்குணம் போக்கவே, என்று அவள் அல்லும் பகலும் சிந்தித்து நடந்தாள். ரத்தின வேலு ஒருபொழுதும் தேக வலிவு மிகுதி உடையவன் அல்ல. நோயாளி என்று அவன் ஒருநாளாவது படுத்

திருந்ததுமில்லை. முக்கியமாய்த் தன் சுகத்தில் சிந்தை வைப்பதும், அற்பக்குறையைப் பாராட்டி முறையிடுவதும் அவனுடைய சுபாவமல்ல. ஆனாலும் அத்தனை காலமும் வியாதி அவன் தேகத்தில் குடிகொண்டு, பாட்டைசாரிகள் சொத்தைச் சூறையிடத் திருடர் பதிவிருந்து சமயம்பார்க்கும் வண்ணம், மீறிப் போகக் காரணம் உண்டாகுமளவும் அடங்கி யிருந்தது. உள்ளே பதுங்கியிருந்தது ரத்தினவேலுக்கும் பச்சையம்மாளுக்கும் எப்படித் தெரியும். காரியத்தின் சீர் இவ்வாறிருக்க, கண்ணின் கருவிழிபோலப் பேணி விரும்பி வளர்த்த தங்கமான பிள்ளைகள் நாலும் ஒன்றுமாறி ஒன்று சடிதியில் இறந்த துக்கத்தை எளிதில் மறக்க அவன் மனம் கல்லா, மரமா, மண்ணா? சின்னஞ் சிறு வயதில் பிள்ளைகளைக் கொள்ளை நோய்க்கு இரையாய்க் கொடுத்ததை நினைத்து நினைத்து உருகி, அவன் தேகம் மெலியவும் ஒரு வளைக்குள் இருந்த விஷசர்ப்பம்போல வியாதி சீறிச் சினந்து வெளிப்பட்டது. நாலாவது பிள்ளை மரித்து நாலைந்து மாசம் செல்லுமுன் ரத்தினவேலும் இறந்து, நாலுடன் ஐந்தாக அவர்கள் போலக் காடு சேர்ந்தான்.

அன்றுதொட்டுச் சில காலவரையிலும் பச்சையம்மாள் கேவலம் நடைப்பிணம்போல் திப்பிரமை கொண்டிருந்தாள். அவளுக்குக் குடும்பவிசாரம் பற்றறத்தீர்ந்தது. பத்துமாசம் சுமந்து பரிவாகப்பெற்று வளர்த்தபிள்ளைகளைப் பாலியத்தில் சாகக்கொடுத்தும், பிள்ளை இல்லாக்குறையை ஒருவாறு மறப்பிக்கத்

தப்பிப்பிழைத்திருந்த பிராணநாயகனைப் பறிகொடுத்துத் திக்கற்றவளாகியும், பச்சையம்மாள் கடைப் பிடியாய்க்கொண்ட பக்தி நெறியை ஒருநாளும் விட்டு நீங்கவில்லை. அவள், "என்னை ஆட்கொண்டருள்புரியும் இறைவனே, உமது திருவடிகளை அநுதினமும் மறவாதிருக்க அடியாளுக்கு நல்ல புத்தி புகட்டி, எனது அஞ்ஞானத்தை நீக்கிக் கடாக்ஷிக்கவேண்டும். ஏழை அடியாள் சித்தமல்ல, தேவசித்தமே நடந்தேறக்கடவது" என்று நித்தமும் பிரார்த்தனை செய்துவந்தாள். இறந்து கடவுள் திருவடி சேர்ந்த தன் கணவனுடனும் மக்களுடனும் தானும் இந்த ஜன்மம் முடிந்து போய்ச் சேரும்படி, இப்பூவுலகில் இருக்குமளவும் கடவுளை வந்தித்து வாழ்த்தி வழிபடத் தனக்குப் பக்தியும் பொறுமையும் மனவுறுதியும் வேண்டுமென்று அவள் பிரார்த்தித்துவந்தாள். அவப்பொழுதிலும் தவப் பொழுது நன்றென்று அவள் அனுபவத்தில் கண்டாள். தெய்வமும் அவள்பங்கில் இருந்து, அவள் பிரார்த்தனைக்குச் செவி கொடுத்தது. அடியாருக்கு அடியாராகும் கடவுள் அவளுக்குப் பிரசன்னராகி, "உத்தமியே, உனது பக்திக்குச் சந்தோஷப்பட்டோம். நீ விரும்பிய வரம் தந்தோம். விசாரத்தை விட்டுச் சுகமாயிரு," என அவள் மனம் குளிரச் சொன்னதுபோல், அவளுடைய கோரிக்கை தவறுமற் பலித்தது. கதியற்ற அவ்வேழையைப் பார்க்கினும் அதிக ஆவலுடன் தெய்வத்தொண்டு செய்தவர்களைக் காண்பது அரிது.

குடும்பத்தில் அருந்துயர் விளைக்கும் கேடுகள் பல

அடுத்துவந்தும், பச்சையம்மாள் சித்தம் சலித்துத் தெய்வத்தை நோகாமல், இன்பம் வருவதும் துன்பம் வருவதும் எடுத்த உடலுக்கு இயற்கையென்று எண்ணி, தெய்வபக்தியை விலை மதிக்க அரிய பூஷண மாகப் போற்றி நடந்ததைக் கண்டு கேட்டறிந்தவர்கள் அவள் சுகதுக்கங்களைத் தங்கள் சுகதுக்கங்கள்போல எண்ணி, அவரவரால் இயன்றமாத்திரம் அவளுக்கு உதவிசெய்ய யார்தான் விரும்பார்? பச்சையம்மா ளுக்கு எழுத வாசிக்க, தையல் தைக்க, பாலிகா பாடசாலைகளில் கல்வி கற்பிக்கத்தெரியும். ஆகையால் தகுதியான ஜீவனம் அமர்த்திக் கொடுக்கத் தக்க உபகாரிகள் அவளுக்கு அறிமுகமானவர்களில் வெகு பேர் உண்டு. உண்டானாலும் ஜீவனம் தேடுவதல்ல அவள் தாற்பரியம். வியாதியின் குணம் குறிகளையும், சிகிச்சை விதிகளையும் ஒருவாறு அறிந்திருந்தால் முன்னே தகுதியான ஔஷதம் கொடுத்துத் தன் குடும்பத்தில் இறந்தவர்களில் இரண்டொருவனையா வது தப்புவித்திருக்கலாமே யென்று எண்ணி, இனி யாவது தன்னால் கூடுமளவு பிறருக்கு உபகாரம் செய்ய லாமே என்று கருதி, வைத்தியசாலையில் வைத்தியர் கள் ரோகிகளுக்கு மருந்துசெய் முறையைக்கண்டு பயிலவும், பயின்றபின் அன்றன்று வீடு வீடாகப் போய்த் தான் வைத்தியம் செய்யவும் பச்சையம்மா ளுக்கு மனம்கொள்ளாத விருப்பம் உண்டாயிற்று. இந்த விருப்பத்தை அவள் ஒரு பிரபுவுக்குத் தெரி வித்தாள். அவர் அவளுக்குள்ள லோகோபகார

குணத்தைமெச்சி, ஒருநாட் காலையில் பச்சையம்மாளை வைத்தியசாலைக்கு அழைத்துப்போய், புத்தி சூக்ஷ்மமும் பூததயையுமுள்ள வைத்தியர் ஒருவருக்கு அறிமுகம் செய்வித்தார். அவ்வைத்தியர் அவள் குடும்பத்தில் சம்பவித்த ஆபத்து விபத்துகளைக் கேட்டு வியசனமுற்று, அதுமுதல் பிரதிதினமும் காலை மாலை இருபொழுதும் அவ்விடத்திற்கு வந்து வைத்தியம் பழக இடங்கொடுத்தார். பச்சையம்மாள் அவ்விடம் போனநாள் முதல் கருத்துடையவளாக உழைத்து, நாளுக்கு நாள் தேறினாள். புத்தி சக்தியுள்ளவளாதலால், அவள் கண் கண்டதெல்லாம் கை செய்யப் பயின்றது. மருந்து செய்முறை யன்றி, அந்தந்த மருந்திற் சேரும் சரக்குகளின் குணத்தையும் வைத்தியரால் அவள் தெரிந்துகொண்டாள். அவருடைய போதிப்பால் கொஞ்சக் காலத்திற்குள் பச்சையம்மாள் வைத்திய முறைகளில் கைதேர்ந்தவளாயினாள். வைத்தியர் அத்தனை புத்தி சூக்ஷ்மமுள்ள மனுஷியைத் தமது வைத்தியசாலையிலேயே அமர்த்திக்கொண்டால், வியாதியுடன் தம்மிடம் வருகிறவர்களுக்கு அவளால் மிக்க அனுகூலம் உண்டென்று கண்டு, அவள் அபிப்பிராயத்தை அறியப்பார்த்தார். பகல் முழுதும் சேவகத்தில் அமர்ந்து திரவிய சம்பாத்தியம் செய்து சுகித்திருப்பதல்ல பச்சையம்மாளுக்கு அபிப்பிராயம். ஒரு வைத்தியசாலையில் தினம் தினம் சற்றுநேரம் சம்பளத்திற்குச் சேவகம் செய்வதும், ஒழிந்திருக்கும் காலத்தில் ஏழைகள் வீட்டுக்குப்போய்,

அங்கங்குள்ள வியாதியுடையவர்களைக் கண்டு, பக்ஷி தோஷம், திர்ஷ்டிதோஷம், குளிதோஷம், தெய்வக் குற்றம் முதலிய எதுக்களால் வியாதி உண்டாகிற தென்று நம்பி வைத்தியம் செய்யாமலிருப்பது மூடத் தனம் எனத் தெரிவித்து, மருந்து செய்யும் முறையை யுக்தியாய்ச் செய்யும்படி எவருக்கும் தோன்ற விளக் குவதும் ஆகிய இவ்விரண்டு காரியமே அவளுக்குப் பிரியமான காரியமாயிருந்தது. ஆகையால் இதை அவ்வுத்தமி வைத்தியருக்குத் தெரிவித்தாள்.

மேற்படி வைத்தியருக்கு ஊரிலெங்கும் மிக்க செல்வாக்கு உண்டு. பச்சையம்மாள் விரும்பியபடி, வைத்தியருடைய வாக்குச் சகாயத்தால், சென்னை நகரில் தருமத்திற்கு வைத்தியம் செய்யும் சங்கம் ஒன்று ஸ்தாபித்து ஆதரிக்கும் வைத்தியசாலையில் பிரவேசித்தாள். அங்கே தொழில்செய்யும் நேரம் போக, காலையில் இரண்டரைமணி மாலையில் இரண் டரைமணி பச்சையம்மாளுக்கு ஒழிவானவேளை. அவ் வேளைதான் அவள் திரிந்து வருந்தி எளியோருக்கு உதவி புரியும் காலம். அவள் அலுப்பற்று எத்தனை வீட்டுக்குப் போவாள்; எத்தனை ரோகிகளைக் கண்டு உபசரித்துத் தேறுதல் சொல்லுவாள், எத்தனை வியாதி களுக்குத் தகுந்த ஔஷதம் கொடுத்துத் தீர்ப்பாள், எத்தனை குடும்பங்களில் துக்கம் போக்கிச் சுகம் பெருக்கித் திரும்புவாள். ஒழிந்தவேளையில் பிறர் மெய்யுதவி கையுதவியின்றி இவள் ஒருத்தியே செய்த வெகுஜன உபகாரத்தை நினைக்க நினைக்க வியப்

புண்டாகின்றதே. நோயாளிகள் பச்சையம்மாள் முகம் காணும்போதெல்லாம் தங்கள் பிணிபாதி தீர்ந்ததென்று மனம் தேறுவார்கள். இருட்டறையில் இருந்து நிர்ப் பந்தப் படுவோருக்குச் சடிதியில் சூரிய கிரணம் தோற்றினால் எப்படியோ அப்படி அவர்களுக்கு அவளைப் பார்த்தமாத்திரத்தில் அகமகிழ்ச்சியும் முக மலர்ச்சியும் மிகுதியாகும். தருமசிந்தையோடு தாயைப் பார்க்கினும் அதிகப் பரிவுடன் வளர்க்கும் பச்சையம்மாள் முகதரிசனம் நேர்ந்தால் வியாதி நீங்கிற்று என்று நோயாளிகள் களிப்பார்கள். நற்குண நற்செய்கை களிற் சிறந்த பெண்கள் யாவருக்கும் பச்சையம்மாள் நெற்றித் திலகம்போலத் துலங்குவா ளென்று சொல்லப் பொருந்தும். நல்லது, இவ்வரிய குணுதிசயமுள்ள உத்தமியைத் தெருவில் கண்டவர்கள் சற்று நின்று, அவள் இனிய முகத்தை ஏறிட்டுப் பார்த்து " இவள் ஆர், இவள் செய்யும் தொழில் என்ன" என்று தமக்குள் தாம் விசாரித்து அதிசயிப்பது புதுமையா? அந்தப் பெண்கள்நாயகத்தைக் காணும் எவருக்குத் தான் அதிசயம் உண்டாகாது?

புரட்டாசி மாசாரம்பத்தில் ஒருநாட் காலையில் பச் சையம்மாள் ஒரு முடுக்குத் தெருவில் போனளென்று முன்னே சொல்லியிருக்கிறோமே. அன்று அங்கு அவளைக் கண்டவர்கள் ஆர் எவளென்று கேட்க நிமித் தம் இல்லை. எல்லாரும் அறிவார்களே. தெருவில் ஆடிக்கொண்டிருந்த சிறுவர், சிறுமியர்கள் எல்லாரும் பச்சையம்மாளைக் கண்டால் ஆடின ஆட்டத்தைச்

சற்றே நிறுத்தி, வழிவிட்டு ஒதுங்கி நின்று, முகம் மலரத் தலை வணங்கி மரியாதை செய்வார்கள். காய் கனி முதலான இலைக்கறி கூடைகளில் கடைக்குச் சுமந்துபோகும் பாங்கறியாத ஸ்திரீகளும் புருஷர்களும் வழி விலகுவார்கள். வீதிப் புறத்தில் அங்கங்கே பல பல வீடுகளில் சண்டையிட்டுக் கூவினவர்களும் பச்சையம்மாளைக் கண்டது முதல் அவள் சற்றுத் தூரம்போய் மறையுந்தனையும் வாய் எடுக்காமல் அடங்கி யிருப்பார்கள். ஒருநாள் சற்று ஏழைக் குடும்பம் ஒண்டி இருக்கும் வீட்டினிடம்சென்று பச்சையம்மாள் கதவை மெல்லெனத் தட்டினாள். தட்டின சத்தம் கேட்ட வுடன், உள்ளிருந்த லக்ஷ்மி எழுந்துவந்து கதவைத் திறந்து, பச்சையம்மாளைக்கண்டு, "பச்சையம்மாளா வாருங்கள், வாருங்கள்! இங்கே இப்பொழுது நீங்கள் வந்தது கும்பிடப்போனதெய்வம் குறுக்கேவந்தது போலும். இனிச் சங்கடம் தீர்ந்ததென்று விசாரமற்று இளைப்பாறி யிருக்கலாம். நீங்கள் செய்யும் உபசார மன்றி, நான் செய்வதொன்றும் எங்கள் அம்மாளுக்கு ஏற்கவில்லை. எதற்கும் குறை சொல்லுகிறார்கள். குறை கேட்டுக் காது புளித்துப் போயிற்று," எனச் சற்று வெறுப்பாகச் சொன்னாள். பதினெட்டு வயது சிறுபெண்ணாகிய லக்ஷ்மி மனக்குறையடைந்து இப்படி சொன்னசொற்களைக் கேட்டு, தாயாகிய மீனாக்ஷி, "ஏன் என் பேரில் அபவாதம் சொல்லுகிறாய் மகளே, நான் எப்பொழுதும் உன்னைக் கடுகடுத்துப் பேசுகிறேனா? ரணமாயிருக்கிற என் முதுகைச் சற்றுத் தாங்கிக்

கொள்ளச் சொன்னால், நீ தாங்குவது ஒரு விதம். பச்சையம்மாள் தாங்குவது ஒருவிதம். அந்தப் பக்குவம் உனக்குவருமா" எனச்சொல்லி, வருந்தி ஒரு பக்கம் திரும்பிக்கொண்டாள்.

பின்பு பச்சையம்மாள் "நான் சொல்வதைக்கேளும் மீனாக்ஷி அம்மா, எனக்கு வயசு என்ன, உமது மகள் லக்ஷ்மிக்கு வயசு என்ன? அவள் இன்னும் அறியாப் பெண்தானே, நாள் ஏறஏற, அநுபவம் முதிர்ந்து, அவளுக்கு என் பருவம் ஆகும்பொழுது, என்னைப் போலவே வியாதியுடையவருக்கு ஏற்கும் பக்குவப் பணிவிடை செய்யமாட்டுவாள்" என்றாள்.

பச்சையம்மாள் சொல்லை லக்ஷ்மி செவிகுளிர மனம் களிக்கக்கேட்டு, "என் நெஞ்சில் கபடு சூது இல்லை, என்னால் ஆகுமட்டும் தாயாருக்கு உபசாரம் செய்து வருகிறேன்" என்று சொன்னாள்.

அதற்குப் பச்சையம்மாள், ஆம் ஆம், அது மெய்தான் என்று, நோயாளி படுத்திருந்த அறையை நான்குபக்கமும் திரும்பிப் பார்த்து, போனதடவை நான் இங்கே வந்திருந்தபொழுது சொல்லிப்போனதெல்லாம் தவறாமற்செய்திருக்கிறாய் அம்மா, அதற்கு என் கண்ணே சாக்ஷி. மனிதர் வசிக்கும்வீடு இப்படி சுத்தியாயிருப்பது கண்ணுக்கும் அழகு, தேகசுகத்திற்கும் அநுகூலம். அது நிற்க, மீனாக்ஷியம்மா! லக்ஷ்மியும் நானும் உம்மைப் பக்குவமாய்ப் பிடித்துத்தூக்கிக் கீழே வளர்த்திவிட்டு, சமுக்காளத்தையும் மெத்தையையும் எடுத்து உதறி, மறுபடியும் மெத்தையிட்டுச் சமுக்

காளம் விரித்த பின், உமது முதுகு ரணத்தைப் பார்வையிட்டுப் பக்குவம் செய்வேன். நேற்று நான் அனுப்பிய துப்பட்டிகள் எங்கே, என்று கேட்டாள்.

இதோ இருக்கின்றன என்று லக்ஷ்மி எடுத்துக் கொண்டுபோய்க் கொடுத்தாள். பின்பு பச்சையம்மாள் அங்கிருந்தக் கம்பளத்தை யாவது, குளிர்தாங்கும் மெல்லிழை வஸ்திரம் ஏதாவது இருந்தால், அதை எடுத்துவா என்று கேட்டுவாங்கி, கீழே விரித்து, மெத்தையாக மடித்தாள். அப்பால் துப்பட்டிகளை எடுத்து, ஒன்றை மீனாக்ஷியினுடைய தோட்பட்டையின் கீழும், ஒன்றை இடுப்பின் கீழும்போட்டு, தோட்பட்டைத் துப்பட்டியின் இரு தலைப்பையும் லக்ஷ்மிபிடிக்க, கனம் அதிகமுள்ள இடுப்பண்டை துப்பட்டியின் இருதலைப்பையும் தான் பிடித்து, இருவரும் ஏக காலத்தில் மீனாக்ஷியைத் தூக்கி, கீழ் மெத்தையில் மெதுவாக வைத்தார்கள். பின்பு கச்சுப்பட்டை கட்டில்மீதிருந்த மெத்தையைத் திருப்பிப்போட்டு, சமுக்காளத்தை உதறி விரித்து, கால்மாடு தலைமாட்டில் தலையணையிட்டு, இருவரும் மீனாக்ஷியை முன்போலப் பத்திரமாகத்தூக்கிக் கட்டிலில் வளர்த்தினார்கள். வியாதியில் வருந்துகிறவர்களை உடம்பு அதிராமல் மெதுவாக எடுக்கப் பிடிக்கப் பயில்வது கஷ்டமல்லவா. உடம்பு வலிக்காமல் வெகு பக்குவமாய் அவர்களைத் தொடவேண்டும். பின்னும் பச்சையம்மாள் துப்பட்டி சமயத்தில் கிட்டாதிருந்தாலும் பெரிதல்ல. வளமான கைக் குட்டை, ஒற்றடம்கொடுக்க உதவும். சில தருணங்களில் அதற்கு

இதுவே நல்லது; முதுகில் அக்குட் பக்கத்திலும் இடுப்பிலும் கைக்குட்டை இட்டுப் பிடித்து, ரோகிகளை உடம்பு அசையாமல் கையணையுள்ள நாற்காலியில் அவர்கள் உட்கார்ந்து தேகத்திற்கு வருத்தமில்லாமல் சார்ந்துகொண்டிருப்பதுபோல் அத்தனை சுகமாய்த் தூக்கிக்கொண்டுபோகலாம். அது நிற்க, இனி ரணத்தைக் காட்டும் அம்மா, பார்ப்போம். ஐயையோ, லக்ஷ்மி, ரணத்தில் ரத்தக் கசிவு இருக்கிறது. நீ ஒற்றடம் கொடுத்ததுபோதாதே என்றாள். அதற்கு லக்ஷ்மி, ஒற்ற ஒற்ற, பஞ்சு புண்ணில் உறுத்துகிறதென்று அம்மா என்னைத் தொடவேண்டாமென்கிறாள், என்று மறுமொழி சொல்ல அதுகேட்டு பச்சையம்மாள் ஆம் ஆம், உறுத்தும், ஆனாலும் என்னசெய்வோம். மீனாக்ஷி அம்மா! எவ்வளவு வருத்தம் வந்தாலும், பல்லைக் கடித்துக்கொண்டு தாங்கத்தானேவேண்டும். வேறு விதி இல்லையே, இவ்வித ரணத்தில் ரத்தக்கசிவு சிறிதும் இருக்கலாகாது. இது உமக்குத்தெரியாது. நான் அறிவேன். எங்கும் படரவிடாமல் எளிதில் புண் ஆற்ற, அதை ரத்தக் கசிவு சீக்கசிவு இல்லாமல் நன்றாய் ஒற்றிச் சுத்திசெய்யவேண்டும். ரணத்திற்கெல்லாம் சுத்தியே முக்கியமான ஔஷதம். பக்குவம் தப்பிவிட்டதனால், இனி இதற்கு ரொட்டியைக் கிளறி வைத்துக்கட்ட வேண்டும். அது புண்ணிலுள்ள கள்ள நீரையும் சீழையும் வாங்கி, வருத்தம்போக்கி, புண்ணை உலர்த்தி, விரைவில் ஆற்றும். லக்ஷ்மி! கோதுமைரொட்டி ஒரு துண்டு இங்கு அகப்படுமாஎன்று கேட்க, லக்ஷ்மி அகப்படும்

என்று சொல்லிப்போய், மூங்கில்பெட்டியைத் திறந்து, பாதிரொட்டி எடுத்துக்கொண்டுவந்து கொடுத்தாள். அதை வாங்கி பச்சையம்மாள் இதை அகலக் கரண்டியில் கிளறிக் கட்டும்வகை தெரியுமாவென்று கேட்க, லக்ஷ்மி, நல்ல கேள்வி கேட்டீர்கள்! ரொட்டி மாவைக் கிளறத் தெரியாதவர்களும் உண்டா என்று சற்று அலக்ஷியமாய்ச் சொன்னாள்.

பச்சையம்மாளுக்கு அந்தச் சொல் சிரிப்பாய் இருந்தது. நான் சொல்லக்கேள், லக்ஷ்மி, எந்த வேலையும் முந்தப் பயிலாமல் எளிதில் செய்யலாகுமென்று சொல்வது வாய்க்கு எளிதுதான். செய்து பார்த்தாலல்லவோ அதன் அருமை பெருமை தோன்றும். ஒருவேளை உண்டி சமைக்க எவருக்கும் தெரியும். பெண்பாலர்கள் சமைத்துச் சமைத்துக் கைபடிந்திருப்பார்களே. அளவறிந்து முறை தவறாமல் மாவைக் கிளறிச்செய்ய யாவருக்கும் கைவருமா வராது. நல்லது நான் இந்த ரொட்டியைத் துணுக்கைத் துணுக்கையாகப் பிச்சிவைக்கிறேன் நீ போய்க் கொஞ்சம்வெந்நீர் சுடவை, என்று பச்சையம்மாள் லக்ஷ்மியை ஏவினாள்.

பின்பு லக்ஷ்மி வெந்நீர் வைத்துக்கொண்டுவந்து பச்சையம்மாள் கிண்ணத்திற் சன்னமாய்ப் பிய்த்துப் பண்ணிவைத்த ரொட்டி நன்றாய் உப்பத்தக்க அளவிற்கு மெதுவாய் விட்டு, ஆவி போகாதிருக்கக் கிண்ணத்தின் வாயை மற்றொரு தட்டைக் கிண்ணத்தால் மூடினாள்; ரொட்டித் துணிக்கை வெந்நீரில் ஊற, பச்சையம்மாள் கொக்கிறகுபோல துல்யமான வெள்

ளைத் துணித்துண்டு ஒன்றைத் தன் பைக்குள்ளிரு ந்து எடுத்துப் பீடத்தில் விரித்தாள். ஐந்தாறு நொடிப் பொழுதில் உபநாகத்து (மாக்கட்டு) வேண்டு மளவிற்கு நீராவியில் பக்குவமாயிற்று. பச்சையம்மாள் கிண்ணத்தைத் திறந்து, அகப்பைக்காம்பால் நீரூறி இளகியிருந்த ரொட்டித் துணிக்கைகளைச் சூடாறு முன் கிளறி, மேற்சொல்லிய வெள்ளை வஸ்திரத்தில் கொட்டி, கத்தியலகால் மெதுவாகப் பரப்பி, அதன் மேல் வஸ்திரத்தின் ஓரங்களை மடித்து, புறங்கையை வைத்து, சூடு பதம்பார்த்தாள். கிளறின மாவானது (உபநாகம்) ரோகியை வருந்தாமற் புண்ணில்வைத்துக் கட்டத்தக்க இளஞ்சூடாயிருந்தது. பச்சையம்மாள் அதை எடுத்து, மீனாக்ஷி முதுகு ரணத்தில் மிருது வாக வைத்து, நிலை பெயராதிருக்கத் துணி சுற்றிப் பணிக்கையாய்க் கட்டினாள்.

அப்பால் பச்சையம்மாள் பைக்குள்ளிருந்து பின்னும் ஒரு கவணம் எடுத்து, லக்ஷ்மிக்குக் காட்டி, பார் அம்மா இது அகப்படாத அரும்பொருளல்ல. இது வாங்க டில்லிக்குப் போகவேண்டுவதில்லை. எங்கும் குறைந்த விலைக்கு நினைக்கும்பொழுதே அகப்படும். இதற்கு நான் கொடுத்த கிரயவிகிதம் கஜம் இரண்டு அணா. இந்தக் கவணம் தாராளமாய் உடலைச் சுற்றிக் கட்டத்தக்க அளவிற்கு நீண்டிருக்கவேண்டும். கவ ணத்தின் இருதலைப்பிலும் நாடா தைக்கவேண்டும். ஒரு தலைப்பில் நாடாவை நாலைந்து அங்குலம் உட் கொள்ள வைத்துத் தைக்கவேண்டும். இப்படிச்

செய்தால், கட்டிச் சற்று இறுகவேண்டும்பொழுது, சங்கட மின்றி இறுக்கவும், தளரவேண்டும்பொழுது தளர்த்தவும் உதவியாகும். கோடிதேடலாம், 'கோவணம் தேடக்கூடாது' என்னும் பழமொழிப்படி இவ்விதத் துணி சொற்ப விலைக்கு அகப்பட்டாலும், இதன் உபயோகம் மிகுதியாம்; எப்படி என்றால், எளிதில் கசக்கி வெளுக்கச்செய்யலாம். வெளுத்த துணி இரண்டொன்று எப்பொழுதும் கையில் இருக்கும். கிளறினைதக் கட்டத்துணி இல்லையென்று சமயத்தில் அலையவேண்டுவதில்லை. இதைத் தேடிவைக்காதிருந்து, வேண்டும்பொழுது கைக்குக் கிட்டும் கந்தைத்துணியால் கிளறினைதக் கட்டிவந்தால் சில சமயங்களில் அண்டையில் அகப்படாது. அங்கு, இங்கு தேடித் திரியவும் நேரிட்டாலும் நேரிடும். அதற்குள் மாக்கட்டு வைத்த இடத்தினின்று வழுவிப்போம், வழுவாதிருப்பினும் சூடாறிப்போம். இவ்விருவிதத்தில் எதுவும் காரிய சித்திக்கு லோபமே தவிர மற்றப்படி அல்ல. இது நிற்க, கேள் லக்ஷ்மி, இப்பொழுது கட்டின மாவு இரண்டரை நாழிகைவரையில் இருக்கட்டும். அப்புறம் கட்டவிழ்த்து, அதை எடுத்தெறிந்துப் போட்டு, நான் தரும் மெல்லிழைத்துணியை நாலைந்தாக மடித்து, ரணத்தில் வை. ரணம் அதிகம் பொக்குளித்திருந்தால் நீ வைத்தியசாலைக்கு வருவாயாகில் தைலம் ஒன்று கொடுப்பேன், எனச்சொன்னாள்.

அந்தத்தைலம் அதிகவிலைகொடுத்து வாங்கவேண்டுமா? என்று லக்ஷ்மிகேட்க, பச்சையம்மாள், இல்லை,

இல்லை, நயமான விலைக்கு வாங்கலாம். ஒன்றரை அணு பெறும் தைலம் உன் தாய் முதுகு ரணத்திற்குப்பூச இரண்டுவாரத்திற்குக் காணும். தடிக்கப்பூச நிமித்தம் இல்லை. இன்னும் ஒரு பக்குவம் யூகித்துச்செய்யவேண்டும். மெதுவான தலையணை ஒன்று தருவித்துக்கொடுப்பாயா? என்றுகேட்க, லக்ஷ்மி ஆம், மாணிக்க அம்மாள் நேற்றுக்கொண்டுவந்து கொடுத்த காற்று மெத்தை இருக்கின்றது. அது தாயாருக்கு இஷ்டமில்லை. கல்லு போல் இருக்கிறதென்று சொல்லுகிறார்கள் என்று மறுமொழிகூறினாள். பின்பு பச்சையம்மாள் அம் மெத்தையை எடுத்துவரச்சொல்ல லக்ஷ்மி கொண்டு வந்துகொடுத்தாள். அதைக் காணவும் பச்சையம் மாளுக்குச் சிரிப்புவந்தது. கையில் வாங்கிப் பார்த்து, பச்சையம்மாள் கல்லைப்போல் இருக்கிறதென்று உன் தாயார்சொன்னது தப்பல்ல, மெய்தான். நீசுவாசாசயத்தில் இருந்த வாயு முழுதையும் இந்த மெத்தைக்குள் பூரித்திருக்கிறாய். அதனாற் கல்லுபோல் இருக்கிறது. இதைப் பஞ்சணைமெத்தைபோல மிருதுவாகும்படி செய்வதும் உன்னால் ஆகுமே தவிர மற்றப்படி அல்ல, என்று சொல்லி, காற்றுவழி அடைக்கும் தடை நாவைச் சிறிது விலக்கி, உள்ளிருந்த வாயுவிற் பாதியைப்போக்கி, பின்பு வழி அடைத்தாள். மெத்தை பஞ்சு மெத்தையிலும் பதின்மடங்கு மிருதுவாயிருந்தது. அப்பால் மீனாக்ஷிஅம்மாளைத் தூக்கி, உடற்கனம் முதுகிற் பொருதிருக்கும்படி மெத்தையில் உபாயமாய் வளர்த்தி, இப்பொழுது உமக்குப் படுக்கை

மெதுவாயிருக்கிறதா? என்று பக்ஷமாய்க் கேட்க, மீனாக்ஷி, அம்மம்ம இந்த சுகம் எனக்கு எண்பது நாள்வரையில் இல்லை. நீர் இங்கேவர, என்பிணிதீர்ந்து, எனக்குப் பூரணசௌக்கியம் உண்டாமென்று நான் முன்சொன்னதென்ன பொய்யா, என்றாள்.

நான் இப்பொழுது மாவுகிளறிக் கட்டின பக்குவத்தைக் கண்டதனால், இனி லக்ஷ்மி இந்த உபசாரங்கள் எற்கும்வண்ணம் செய்யமாட்டுவாளென்று எண்ணுகிறேன், லக்ஷ்மி, மா கிளறும் முறை உனக்கு மயக்கமறத் தெரிகிறதல்லவா. உள்ளது சொல்லு, என்று பச்சையம்மாள் கேட்க, லக்ஷ்மி, ஆம், அம்மா, தெரியும், என்று உத்தரம்சொன்னாள். அதன்மேற் பச்சையம்மாள் இன்னும் சொல்லக்கேள் லக்ஷ்மி, உபநாகம் இன்னும் சூடாக இருக்கவேண்டுமானால், கிண்ணத்தினுள்ள உபநாகத்தை அளவிற்குத்தக்கதாய் சூடேற்றும்பொருட்டு ஆவிபறக்கவிடாமல் அதை மூடியபின், அடுப்பிற் கொதிக்கும் வெந்நீர்ப்பாண்டத்திற்குள் சற்றுவேளை வைக்கவேண்டும். கொதிநீர் மாவுள்ள கிண்ணத்திற்குள் விழாமல் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளவும். எவ்வித உபநாகஞ்செய்வதற்கும் முறை ஒன்றுதான். ஆளிவிரை கிளறுவதற்கு வெந்நீர் சற்றதிகம் விடவேவேண்டும். கிண்ணத்தின் மூடியைத் திறந்து மாவைக்கிளறும்பொழுது, அது வெண்ணெய் போல மசிந்து சூடாறிருக்கும்படி, அளவறிந்து வெந்நீர்விடவேண்டும். ஒரு துளி ஏறினாலும் ஆகாது, குறைந்தாலும் ஆகாது. ஆவியில் வெந்தபின்னும் வெந்

நீர் விட்டால், உபநாகம் பழுதாய்ப்போம், முதலில் அளவிற்கு அதிகம்விட்டால் மாவின்சுடுகை ஆறிப் போய் ரோகிக்கு சுகமாயிராது, என்று செய்பாகம் திட்டமாய்க் கற்பித்தாள்.

அதுகேட்டு லக்ஷ்மி, கடுகுமாவு கிளறு முறையும் இதுதானு? அன்றொருநினம் எனக்கு நெஞ்சுநோ விற்கு மாணிக்கஅம்மா கடுகு அரைத்துவைத்துக் கட் டச்சொன்னார்கள். அதுசெய்ய வகைதெரியாமல் விட்டுவிட்டேன், என்று ஆவலாய்க்கேட்டாள். பச்சை யம்மாள் ஆமாம், எவ்வகை உபநாகமானாலும் செய் வகை இதுதான். கோதுமைமா, கடுகுமா இரண்டும் சரிக்குச்சரிசேர்த்து, வெந்நீரில் காடி அல்லது புளிச்ச நீர் கொஞ்சங் கலந்து அளவாகவிட்டுக் கிளறவேண்டும். காரம் அதிகமுள்ள உபநாகஞ் செய்யவேண்டில், ஒரு அகலகரண்டி கடுகும், உச்சிக்கரண்டி கோதுமைமாவும் சேர்த்து, காடியைக் கொதிப்பித்து விட்டுக்கிளறிக் கட்டலாம். இந்த உபநாகத்தை உற்றசமயத்திலன்றி, எப்பொழுதும் கட்டலாகாது. பாலியருக்கு இது முக் காலே மூன்றுவீசமும் உதவாது, பின்னுமொரு வகை உத்தமமான உபநாகம் உண்டு. அது சிறு ஆளிவிரைமா அகலக்கரண்டி இரண்டும், கடுகுமா சின்னகரண்டி ஒன் றும் நன்றாய்க்கலந்து செய்யப்படுவது. அதைத் துணி மடிப்பில்லாமல் ரணத்தின்மேலேயே வைத்துக் கட்ட வேண்டும். கடுகுமா கிளறி கட்டும்பொழுதெல்லாம் மெல்லியகந்தைச் சல்லாத்துணி மடிப்பிட்டுக் கட்டு வதுமுறை. இதை நீ மறந்துபோகாமல் இருக்கவே

ண்டும். ரணத்தை ஆற்றப் பெரும்பாலும் ரொட்டி உபநாகமும் ஆளிவிரை மாவின் உபநாகமும் கைகண்ட மருந்து. இவ்விரண்டும் சீழ்முதலிய கள்ளநீரை அற வாங்கிவிட்டு ரணத்தைச் சுத்திசெய்யும். ஆனாலும் இந்த வரையறைதெரிய யுக்தியும் அனுபவமும் வேண்டும். நாலுபெயர்க்குள்ள இயற்கையறிவு அல்லது விவேகம் இருக்குமானால், நோயாளிக்குவேண்டும் உபசாரம் அனைத்தும் செய்யத்தக்க பக்குவசாலி ஆவாய். இன்றைக்கு நான் இன்னும் நாலைந்து ரோகிகளைப்போய்ப்பார்க நினைத்துவந்தேன். நாழிகைசென்றது. போய் வருகிறேன், என்று சொல்லிப்போக எத்தனித்தாள்.

லக்ஷ்மி தடுத்து, அம்மா, அம்மா, இன்னும் அரைக்கால் நாழிகைநேரம் நில்லுங்கள், என் பெரியதாயார் ஒரு கட்டிவந்து படும் உபத்திரவத்தை அப்பா நினைக்க மனம் விடவிடவென்று உதறுகிறது. அதை ராஜ கட்டி என்று சொல்லுகிறார்கள், மேலும் உங்களைக் காணும்பொழுது அதற்குக் கைகண்டமருந்து கேட்டுச் சொல்வதாக வாக்குக் கொடுத்திருக்கிறேன், என்று வருந்திச் சொன்னாள். "உன் பெரியதாயார் இருக்கும் இடம் எங்கே" என்று பச்சையம்மாள் கேட்டதற்கு லக்ஷ்மி, இருப்பிடம் சைதாப்பேட்டை. பெரியதாயார் மகள் என் அக்காள் இன்று இங்கேவருவாள். உங்களை மருந்து கேட்டுச்சொல்வேன் என்றேன், என, பச்சையம்மாள் சொன்ன மறுமொழி இதை ஒரு கண் பார்த்து மருந்து செய்வதற்குச் சமானம் இல்லை. ஆனாலும் சைதாப்பேட்டை அத்தனை தூரம்போய் வர

எனக்கு இப்பொழுது அவகாசம் ஏது? நான் அறிந்த உத்தம சிகிச்சை ஒன்று சொல்லுகிறேன் கேள். மரத்திற் கடைந்த வட்டவடிவான கிண்ணங்கள் இரண்டு வாங்கு. விலை அதிகமிராது. இரண்டரை அணு, மூன்றணு கொடுத்தால், இரண்டு கிண்ணங்கள் வாங்கலாம். ஒரு தவலையில் தண்ணீர் கொதிக்கவைத்து, தவலை அடுப்பில் இருக்க, சொப்பிரண்டையும் வெந்நீரில் வேகப்போடு. அதற்கு இரண்டொரு நிமிஷம் செல்லும், கம்பளித்துண்டு ஒன்று எடுத்து, இரண்டு மூன்றாக மடித்து, அதன் மத்தியிற் கட்டியின் அளவு துவாரம் அறுத்து, அத்துவாரத்தின் வழியாகக் கட்டி தெரிய, கம்பளிமடிப்பைத் தோலில் அழுந்தவைத்து, அடுப்பில் வேகும் கிண்ணமிரண்டில் ஒன்றை மேகம் மின்னி மறைவதுபோல் அத்தனை விரைவாய் எடு. தாமதகதியாய் எடுத்தால், கையில் சுடும். அதில் சுவறியநீர் நொடிக்குள் வற்றிப்போம். பின்பு அதைக் கம்பளிக்கு மேல் கட்டி வீக்கத்தில் அழுந்தவை. நீராவி சூடு படபட, வீக்கம் வற்றும், வலிப்பும் தீரும். சூடாறியபின், அந்தக் கிண்ணத்தை வெந்நீரில் போட்டு, மற்றதை எடுத்து மேற்சொல்லியவாறே செய். இது செய்யக்கை சுறுசுறுப்பு வேண்டும். கட்டியிற் குளிர்காற்றுப் பட விடவொண்ணுது. முன்பின் அரைமணிநேரம் கட்டிக்கு இப்படி சூடுகாட்டி, அப்புறம் நான் முன்சொன்னபடி உபநாகம்செய்து கட்டு. தோல் காரம்தாங்குமானுல், ஆளிவிரைமா உபநாகங்கட்டுவதே உத்தமம். இளந்தோலுக்குப் பாதி ஆளிவிரைமா, பாதி ரொட்டிப்

பொடி சேர்த்துக் கிளறிக் கட்டவேண்டும். கட்டிக்கு ஆளிவிரைமாக் கிளறி கட்டுவதைப்போல் மற்றெந்த கட்டுங் குணஞ்செய்யாது. காரம் தாங்கக்கூடாதவர் களுக்கு ரொட்டி உபநாகந்தான் கட்டவேண்டும். வேறு சிகிச்சை இல்லை. கட்டி முகம்கண்டுதானே உடையா திருந்தால், சத்திரம் செய்யவேண்டும். மேற் குறித்த வாறு நீராவி சூடுஅனல் கட்டி முகத்திற் காட்டினுல், அது வலிய உடையாமல் போகாது. கட்டி வலிய உடைந்தாலும், சத்திரம் செய்தாலும் கட்டியைக் கரைத்து, சீழையும் புண்ணீரையும் கக்குவித்து, ரணத் தைச் சுத்திசெய்து ஆற்றும்படி பின்னும் நீராவிசூடு காட்டவேண்டும். ஆணிச்சீழ் வந்தவுடன் தோல் தடிப் பின்றி வெளுத்திருக்கும். அப்புறம் நீராவிச்சூடு காட்டவேண்டியதில்லை. ஒரு பகல் முழுதும் தண்ணீ ரில் கை வைத்திருப்பவர்களுக்கு அந்தக் கை வெளுத் திருப்பதுபோல கட்டிமுகத்தோல் வெளுக்குமானுல், அதுவே புண்ணீர் அறத்தொலைந்ததற்குக் குறிப்பா கும். பின்பு உலர்ந்தரணம் ஆற, துணியில் ஏதாயினும் ஒரு தைலம் தடவிப்போடவேண்டும், வெண்ணை தட வினுலும் தடவலாம். கட்டி, எரிவந்தமானபருவு, ராஜ கட்டி இவைகளுக்கு நான் அறிந்த உத்தம சிகிச்சை இதே. இந்த சிகிச்சையால் அனேகருக்கு சுகுவாய் விட்டது. உன் பெரியதாயாரை வருத்தும்கட்டி சற்று விஷமுள்ளதானுல், வைத்தியருக்குக்காட்டி ஔஷதத் தால்தான் போகவேண்டும். பலத்தை விர்த்திசெய் யும் இருவகை புஷ்டிகாமான உண்டிவகையும் கொடுப்

பது அவசியமெனத்தோன்றுகிறது. கண்ணும் புண்ணும் உண்ணத்தீரும், என்று பழமொழி கேட்டிருப்பாயே அவ்வகை உண்டி அவர்கள் வீட்டில் அகப்படாதென்று எண்ணுகிறேன். உதரம் சீழாகவும் நீராகவும் வடிந்தவண்ணமாயிருந்தால் தேகம் மெலிவுறுதிருக்க, அதை நன்றாய்ப்போஷிக்கவேண்டும். உண்டி எம்மாத்திரம் கொடுத்தாலும் தாங்கப்போதாது. சாராயம் முதலிய உத்தீபன மருந்துகொடுத்து உடம்பு தேறுமென்று நான் சொல்லவில்லை. முக்கியமாய்ப் புஷ்டி தரும் உண்டிவகை, பாகுவகை, ஆரூட் அல்லது கிழங்கு, ராஜாவள்ளிக்கிழங்கு முதலிய கிழங்குவகை தேடிக்கொடுக்கவேண்டும். உன் பெரியதாயார் ஊன்வகைதின்று வழக்கப்பட்டிருந்தால், இப்பொழுது உண்ணத்தகும் உத்தமபோஜனம் (சூப்) ஊன்சாறுதான் நான் சிறிதுசமைத்து, சமைக்கும் முறையும் எழுதியனுப்புவேன்.

இதையெல்லாம் கேட்டு லக்ஷ்மி, இந்த உபகாரத்தை நான் எப்பொழுதும் மறவேன், அம்மா. நான் மருந்துக்காக தங்களுடன்கூட வரவா? என, பச்சையம்மாள் ஆம் லக்ஷ்மி, நீவந்தால் பின்னும் உத்தமம். நாளை நன்றைக்கும் நாளைவிட்டு மற்றுநாள் பாகு பணிக்காய்ச் செய்து வைத்திருப்பேன். என்று மீனாக்ஷிக்கும் மகள் லக்ஷ்மிக்கும் வந்தனம் சொல்லி, மூட்டையை எடுத்துக்கொண்டு, மற்றொரு வீட்டுக்குப் போனாள், அவ்வீட்டாரை அவள் அதற்குமுன் ஒருபொழுதும் கண்டதில்லை. வந்து பார்க்கும்படி அவர்கள் அன்றுகாலை

யில் வைத்தியசாலேக்கு பச்சையம்மாளிடத்திற்கு ஆள் அனுப்பியிருந்தார்கள். அவ்வீடு அழுக்கடைந்து அவலக்ஷணமாயிருந்தது. அதில் வீசிய துர்க்கந்த நாற்றம் அங்கிருந்து வழக்கப்படாத அன்னியர் நாசித்துவாரத்தில் நுழைந்தால், அந்தக்ஷணமே வியாதி அவர்களே அடித்து விழித்தி, ஒரு கிடையாய்க் கிடத்தாதிராது.

பச்சையம்மாள் அவ்வீடு சேர்ந்தவுடன் அறையில் சிறிதுநேரம் உலாவி, பலகணிக்கதவைத் திறந்துவிட்டு வெறுப்படைந்து, சுப்பம்மா, இதென்ன அலங்கோலம், இந்த நிர்ப்பந்தம் எங்கும் காணேன். இவ்விதத் துர்க்கந்தவாயு உலாவும் வீட்டில் வசிக்கும் மனுஷர் நோயாளிகளானது ஆச்சரியமல்லவே, என்று சொல்ல, சுப்பம்மாள் அவ்வறைக்குள் ஒரு மூலேயில் தூசிகள் படிந்த கட்டிலில் அழுக்குவஸ்திரம் போர்வையிட்டுப் படுத்திருந்த தன் பிள்ளேயைக் காட்டி, இவன் சுரங் கண்டு படுத்திருக்கிறான், என்றாள். அது கேட்டுப் பச்சையம்மாள் அவனேப்போல் உங்களேயும் சுரம் ஒருங் கிடையாய்க் கிடத்தாதல்லவோ ஆச்சரியம். சுப்பம்மா, கண்டிப்பாய்ச் சொல்லுகிறேனென்று மனக்குறையடையாதிரும். வீட்டைப் பெருக்கி நன்றாகச் சுத்தி செய்வதே எந்தக் குடும்பத்தாரும் முந்திச் செய்யத் தகும் கடமை. அறையின் அடித்தளத்தைத் துடைப்பத்தால் அழுக்கறப் பெருக்கவேண்டும், என்று சற்றுப் பதைப்புடன் சொன்னாள். அறையைப் பெருக்கச்சொன்னது பேதமையுள்ள சுப்பம்மாளுக்கு மிக்க ஆச்சரியமாயிருந்தது? என்ன சொல்லுகிறீர், அறியாப்

பாலன் வியாதிகண்டு கட்டிலோடே கட்டிலாய்ப் படுத்திருக்க, அறைத்தளவரிசையை அழுக்கறத் தேய்த்துப் பெருக்கவா, எனவினுவ, பச்சையம்மாள் ஆமாம், பெருக்கத்தான் வேண்டும். குப்பை கூளத்தை அறத் துடைத்துப் பெருக்கித் தள்ளுவதனுல் குழந்தைக்கு சங்கடம் ஒன்றும் உண்டாகாது. வீட்டில் அழுக்கடைந்து, துர்க்கந்தக் காற்று உலாவவா விட்டிருக்கிறீர்கள். இதனுலே அவனுக்கு வியாதி விளையும், உலாவிய சுத்தவாயு அணுவளவும் குறையாமற் பூரிக்கப்பட்டதே, என உத்தாரம் சொன்னுள். பச்சையம்மாள் சொன்னயம் எவரும் வியக்கத்தகும். அது அதிகாரி வாக்கினின்று பிறக்கும் கற்பனைபோலும், ஆப்தர்கள் விஸ்வாசமாகச் சொல்லும் மதுர வசனம்போலும் இருந்தது. அந்தச் சொற்கள் செவியேறவும், சுப்பம்மாளுக்கு ஒருநாளும் இல்லாத உற்சாகம் பிறந்தது, அவள் அடைத்திருந்த பலகணிக்கதவுகளைத் திறந்தாள், அடுப்பில் நெருப்பு மூட்டினுள், அறையில் தும்பு தூசி குப்பை கூளம் எல்லாம் பெருக்கிக் கூடைகளில் வாரிக்கொண்டுபோய்ப் புறக்கடை வாயில்வழியாய்த் தெருவில் கொட்டினுள். அழுக்கு வஸ்திரம் எல்லாவற்றையுமெடுத்து மூட்டைகட்டி, வண்ணுன் வரும்பொழுது வெளுக்கக் கொடுக்கப் பின்கட்டில் ஓர்அறையிற் கொண்டுபோய் வைத்தாள். பெட்டிக்குள் மடித்து வைத்திருந்த சுத்தவஸ்திரங்களையும் துப்பட்டிகளையும் எடுத்து, மடிப்புப்பிரித்து, வாசலில் கட்டியிருந்த கொடியில் காற்றுடப்போட்டாள். அவ்விடம் அசுத்தம் எல்

லாம் அவ்வளவில் தொலைந்தது. செல்வழியின்றி அடைபட்டிருந்த துர்க்கந்தவாயு வெளிப்பட, பரிமளிக்கும் சுத்தவாயு உலாவிற்று. தன் வீட்டைப் பார்க்கப் பார்க்கச் சுப்பம்மாளுக்கு அதிசயம் உண்டாயிற்று. அவ்வீட்டிற்கு முன் இல்லாத ஒளியும், களையும் மணமும் குணமும் உண்டாயின.

தன் வியப்பையும் சந்துஷ்டியையும் அடக்கும் திறமின்றி, சுப்பம்மாள் பச்சையம்மாளைப் பார்த்து, அம்மா, பிணியறைகளை நீர் நித்தமும் இப்படித்தான் பெருக்கிச் சுத்திசெய்து வருகிறீரா? என்று கேட்க, ஆம், அவகாசம் இருக்கும்பொழுதெல்லாம் இப்படியே செய்துவருகிறேன். பிணி தீர்க்கவும் தொற்றுவியாதி தவிர்க்கவும் பழுதற்றுலாவும் காற்றும் தேகசுத்தி கிரகசுத்தியும் முக்கிய சாதனங்கள் என்பது ரோகோபசாரம் செய்து கைகண்டவர்களுக்கே தெரியும். கொஞ்சக் காலத்திற்குமுன் அம்மை வியாதிகண்ட ஓர் ஏழை மனுஷியைப்பார்க்க என்னை அழைத்தார்கள்; அவள் படும்பாட்டைக்கண்டு, மனம் திடுக்கிடப் பரிதவித்தேன். அவள் வீடு இன்றுகாலையில் உமது வீடு இருந்தபடி அழுக்கடைந்து அலங்கோலமாயிருந்தது. அதைக் கண்டு பொறுத்திருக்க என்மனம் சகிக்கவில்லை. உடனே நானும் அங்கிருந்த மனுஷி ஒருத்தியும் வீட்டை அழுக்கற விளக்கினோம், எருமுட்டை எடுத்து அடுப்பில் நெருப்பு மூட்டினோம், கதவைத் திறந்து விட்டு மூட்டுக்கொடுத்தோம், மழை தூறியதனால் தூவானம் இறைக்குமென்று பலகணிகளைத் திறக்க

வில்லை. அப்புறம் வீடு பரிசுத்தமாகவும் கண்ணுக்கு அழகாகவும் இருந்தது. அடைந்து பழுதுற்ற காற்றுத் தொலைய, தடையறவீசும் காற்று உலாவியது. அப்பால் ரோகிக்கு மருந்தும்வேண்டுமோ? சுத்தமும் சௌந்தரிய முமான வீட்டில் வியாதிக்கு இருப்பிடம் ஏது? நாலு ஐந்து தினத்தில் மனுஷிக்கி வியாதி சொஸ்தமாயிற்று. அங்குள்ள எவருக்கும் அது தோன்றவில்லை என்று பச்சையம்மாள் சொன்னாள்.

அம்மனுஷியின் அங்கத்தில் அம்மைவடு இருந்ததா, என்று சுப்பம்மாள் கேட்க, பச்சையம்மாள், அம்மைத் தழும்பு மாறிப்போயிற்று. அது அவள் அதிர்ஷ்டந் தான், அவளைப் பார்க்கும்படி நான் அழைக்கப்படுமுன் நல்ல வியாபகரான வைத்தியர் ஒருவர் அம்மைத்தழும்பு மாற்று முறை எனக்குச் சொல்லிக்கொடுத்தார். அம் முறை தப்பாமற் பலித்தது. ஒரு புட்டியில் ஜலம்விட்டு, கருவேலம்பிசினி போட்டு ஊறவைத்து, தேன் கொஞ் சம் கலந்து, நன்றாய்க் கறுக்கும்படி புட்டியைக் குலிக்கி ஒட்டடைவேண்டுமளவிற்குப் போட்டு, புட்டியைக்கு லிக்கி, ஒட்டடையை ரோமத்தூரிகை ஒன்று சம்பா தித்து, அதை இம்மருந்தில் தோய்த்து, ஒவ்வொரு தழும்பிலும் இடைவெளியின்றித் தடிக்கப் பூசினேன். பூசினபொழுது அம்மனுஷி அங்கம்கறுத்து, அச்சம் காபிரிதேசத்தாளைப்போலத் தோன்றினாள். அதனால் வரும்பழுது என்ன? அம்மை வடுமாறுமளவும் பத்துப் பன்னிரண்டு நாள் வரையில் மேனிகறுத்த காப்பிரியை ப்போலக் காணப்படுவது ஜீவன் உள்ளளவும்

அவ்வடுத்தீராத சுரூபியாகிக் காணும் எவருக்கும் அருவருப்பாயிருப்பதிலும் இது நல்லதென்று சொல்லவும் வேண்டுமோ. இம்மருந்து பூசினுல், புண் ஆறி உலந்து தழும்பு மாறிப்போம் ஒளியும் காற்றும் அம்மைத் தழும்புமீது படாமலிருந்தால் குழிக்குழியாய் அம்மைவடு உண்டாகாமல் இருக்கும். இதற்குத்தான் மேலே பிசினிப்பூசுவது நலம் என உத்தரம் சொன்னுள்.

இது கேட்டவுடன் சுப்பம்மாள் அம்மம்மா, இவ்வதிசயமே அதிசயம், என்று ஆச்சரியப்பட்டாள். அதிசயந்தான் ஆதியில் இம்மருந்து கண்டறிந்த வகையைக் குறித்துக் கேள்விப்படுவீராஞல், பின்னும் ஆச்சரியம் உண்டாம், சொல்லக்கேளும் சில வருஷத்திர்க்கு முந்தி பட்டாளம் ஒன்று ஒரு பட்டணத்தில் இறங்கித் தங்கியது. அங்கிருந்த கூடாரம் பாசறைவளமான தல்ல ராணுவ வீராருக்குச் சுகம் இல்லை. அம்மை வியாதிகண்டு நாளொருவண்ணம் அபிவிர்த்தியாயிற்று. அம்மை காணக்காண, நோயாளிகளை வைத்தியசாலையில் வைத்து உபசரித்தார்கள். சில தினத்திற்குள் வைத்தியசாலை நிறைந்தது. அதன்மேல் அவ்வியாதி கண்டவர்களை வைத்து வைத்தியம் செய்ய இடம் இல்லை. இதைப்பற்றி உத்தியோகஸ்தருக்குத் தீரா விசாரம் உண்டாயிற்று. பலபல விதத்தில் சிந்தித்தும், ஒருபாயமும் அவர்களுக்குத் தோற்றவில்லை. ஒன்றுக்கும் உதவியற்ற பழஞ்சாமான் முதலிய பொருள்வகை வைக்கும் ஓரறை வைத்தியசாலைப் பக்கத்தில் இருந்தது. அது வியாதிஸ்தரை வைத்து உபசரிக்க

உதவுமென்று ஒருவன் உத்தியோகஸ்தருக்கு யுக்தி சொன்னான். ஆனால் அவ்வறை மனுஷர் வசிக்கத் தக்க வசதியுள்ளதல்ல. அதற்குள் வெளிச்சம் புகுந்து வியாபிக்கவும், காற்று நுழைந்துலாவப் பலகணி ஒன்றுவது இல்லை. அது நிர்ப்பந்தமான இருட்டறை. நான் சொல்வது பொய்யல்ல. ஆனாலும் அது தப்பினால், வேறு புகலிடம் அவர்களுக்கு இல்லையே; கல், முள், கற்பாறை பருக்கைக்கல் உள்ள காட்டுமேட்டுத் தரையில், சுடுவெயிலும், குளிர்மழையும், அடி காற்றும், பீடிக்க நோயாளிகளுக்கு நேரும் ஆபத்தை நினைக்கும் பொழுது, அவ்விருட்டறை அவர்களுக்கு அரண்மனைபோலும் வளமானதென்று சொல்லத்தகும். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் ஆவதுபோல, உத்தியோகஸ்தர் வகைதேடி அவ்விடத்திலிருந்த இருளடையுங் குழிக்குச் சமானமாகிய அவ்வறையைத் தங்கள் புத்தி சக்தியினாலும் செய்நிறத்தாலும் வைத்தியசாலையாக்கி, அங்கே நோயாளிகளை இருக்கச் செய்தார்கள். வெளிச்சமும் காற்றும் உட்செல்லப் பலகணி இல்லாக்குறைக்குச் சுவரில் அங்கங்கே வட்டத் துவாரம் செய்துவித்தார்கள். பிழைப்பதரிதாகிய வியாதி உபத்திரவமுள்ளவர்கள் வெகுபெயர் அவ்விருள் வீட்டில் விடப்பட்டார்கள்; அங்கிருப்பதிலும் இறப்பது இனிதென்று நோயாளிகள் மனக்குறைவடைந்தார்கள். தங்களை அவ்வறைக்குள் விட்டுக்கொல்வது அதர்மமென்று குறை கூறினார்கள்போலும். மனுஷருக்கு ஆதியில் நன்மையாகத் தோன்றுவது அறுதியில்

தீமையாகவும், தீமையாகத் தோன்றுவது நன்மை யாகவும், பலிப்பதைப் பெரும்பாலும் நமது அநு பவத்தில் கண்டறிந்திருப்போமே. தீர்க்கயோசனையும் ஆழ்ந்த அறிவும் இல்லாதவர்கள் அப்போதப்போ துள்ள இன்பதுன்பங்களைச் சாசுவதமென்றெண்ணி வீணில் துள்ளுவதும் தூங்குவதும் இயற்கை. மேற்படி நோயாளிகள்ஆகிய ராணுவசேவகர் வியாதிதீர்ந்து வெளிப்பட்டபொழுது முன்பு தாம் மனக்குறை யடைந்ததும் முறையிட்டதும் சுத்த அநியாயமென்று திர்ஷ்டாந்த பூர்வமாய்க் கண்டார்கள். காற்றும் ஒளி யும் இல்லாத நிர்ப்பந்தமான அறைக்குள் இருந்து பிணிதீர்ந்து வந்தவர்களுக்கு அம்மைவடு அணுவளவும் இல்லை. காற்று நலம் ஒளி நலமுதலியவை பூர்த்தி யாயுள்ள சிறந்த வைத்தியசாலையில் சுகித்திருந்துவந்த வர்களோ, சாங்காலமளவும் நீங்காத அம்மைத்தழும்பு அங்கமெங்கும் நிறைந்த விகாரரூபிகளானார்கள்.

இப்படி பச்சையம்மாள் சொன்ன சங்கதியைக்கேட்டு வியசனப்பட்ட சுப்பம்மாள் இச்சகத்தில் எங்கும் இவ்வித அற்புதச் செய்திகேட்டதில்லை. இதென்ன ஆச்சரியம், என, பச்சையம்மாள், இதைக்கேட்டோர் யாவரும் உம்மைப்போலவே ஆச்சரியப்பட்டார்கள். வியாதிவந்தவருக்கு இப்படி வந்தநோய் வடுவில்லாமல் நிவர்த்தியாய்விட்ட புதுமையை ஒருவராவது கனவி லும் நினைத்திருக்க வில்லையே. அன்று தொடங்கி வைத் தியருக்கும் கல்வித்துறைகள் கற்றுத்தெளிந்த நிபுண ருக்கும் இவ்வற்புதமான காரியசித்தியின் காரணத்

தைக்குறித்துத் தீராவிசாரம் உண்டாயிற்று. அவர்கள் பலவாறு சிந்தித்துத் தீர்க்காலோசனை செய்தார்கள். காரணம் கண்டறியுந்தனையும் அவர்கள் கவலைத் தீரவில்லை. சில நாட் சென்றபின் இதன் நிமித்தம் அவர்கள் அறிவிற்குத் திர்ஷ்டாந்த பூர்வமாய்ப் புலப்பட்டது. கேட்டறிந்த சித்தாந்தத்தைச் சொல்லுகிறேன். நான் இங்கே எடுத்துச்சொல்வது சான்றோர் வாக்கு. அதைத் தடையில்லாமல் ஒப்புக்கொள்வது உமது கடமை. அம்மைவார்த்திருப்பவர்களுக்குப் பால்கொண்டு முத்து உடைந்து, அந்தப் பாலில் சூரிய ஒளிபடப்பட, அதற்கு மேலு மேலும் காரம் ஏறும். ஆகவே, அது நைந்த சதையைப் பின்னும் நைந்துபோகச்செய்துத் தின்றுவிடும். புண் ஆறும் பொழுது, கொப்புளம் இருந்த இடம் குழிந்து கறுகறுத்து, முகம் முதலிய அவயவங்களை விகாரமாகத் தோற்றுவிக்கும், என்று அறிந்தோர் சொல்லக்கேட்ட சாஸ்திரரகசியத்தை வெளியிட்டாள்.

பின்பு சுப்பம்மாள், இனி அம்மைகாணும் எவர்களும் எளிதில் இந்த முறையைக் கைக்கொண்டனுசரித்து, அம்மைவடு தீர்த்துக்கொள்ளலாகுமே, என்று மனம் பூரித்துச்சொல்ல, பச்சையம்மாள் நானும் அப்படித்தான் எண்ணுகிறேன். ஆனாலும், நல்லது சொன்னால் பேதைமனுஷர்கள் கேட்கிறார்களா; சிந்திக்கிறார்களா; வடுமாற மருந்து பூசப்போனால், முகம் விகாரமாக வைத்துக்கொண்டு தங்களுக்குப் பெரிய உபத்திரவமெனப் பாவித்து அவர்கள் மருந்து பூச விடுகிற

தில்லை. இப்படிச் செய்வது பேதமை யன்றி, பெரிதான தீங்கு வருவழியாகவும் இருக்கின்றது. இவ்வரு மருந்துக்கு ஆக்ஷேபம் இங்கே குறிப்பித்த தப்பபிப்பிராயம் ஒன்று தவிர வேறில்லை.

இது நிற்க, "இனி உமது மகன் செய்தி என்ன, சொல்லும் அவனுக்குத் தாகம் எடுக்கிறதா?" எனக் கேட்க, தாய் உத்தரம் சொல்லுமுன், கதிர்வேலுக்குத் தொண்டையும் நாவும் வரண்டு போக அதிக தாகம் எடுக்கிறது, என மென்குரலாய் படுக்கையிலிருந்து சொன்ன மறுமொழி பச்சையம்மாள் செவியில் விழுந்தது. அவள் வியாதிகண்டு கட்டிலிற் படுத்திருந்த சிறுவன் கதிர்வேல் கிட்டப் போய், நாடி பிடித்துப்பார்த்து, "பகல் இரண்டு மணிக்கு உமது சிறு பெண்ணை வைத்தியசாலைக்கு அனுப்புவீராவென்று கேட்க," சுப்பம்மாள், "ஆகட்டும், தடையின்றி அனுப்பிவைக்கிறேன்," என்று சொல்ல, அப்புறம், பச்சையம்மாள் அப்படியானால் வருகிற ஆளிடத்தில் கொஞ்சம் புளிக்கஷாயமும், வேண்டும்பொழுது காய்ச்சும்படி ஒரு சாடியில் புளியும் கொடுத்தனுப்புவேன். அந்தக்கஷாயம் உஷ்ணசாந்தி, எவரும் எளிதில் செய்யத்தக்கது. அது செய்முறையைச் சொல்லக்கேளும்: அரையேயரைக்கால் ரூபா எடை புளியைக் கால்புட்டி வெந்நீரில்போட்டு, ஒரு பாண்டத்தால் மூடி, ஒருமணி நேரம் ஊறவிட்டு, பிள்ளைக்குக் கொடுக் கலாம், அது தாகத்தை அடக்கும். புளிக்கஷாயம் குடித்துக்குடித்து உம்முடைய மகனுக்கு அதில் வெறுப்புத்தட்டினால், ஒரு கிண்ணத்தில்

அரைரொட்டிக்கிழகுமா உச்சிக்கரண்டி யவ்வளவு போட்டு, குளிர்ந்தஜலம் சிறிதுவிட்டு மாவை நன்றாய்க் கரைத்து, அதில் காலேயரைக்கால் ரூத்தல் வெந்நீரும், பாதி எலுமிச்சம் பழத்து ரசமும் கலந்து, சர்க்கரை மூன்று வெகடிப்பிரமாணம் போட்டு, மெல்லிழை வஸ்திரத்தில் வடிகட்டிச்சாப்பிடக் கொடும். கஷாயம் சற்றுத் தடிப்பாயிருக்க வேண்டுமானால், தண்ணீரைக் குறைக்கவேண்டும், இந்த கஷாயம் வாய்க்கு இதமானது, இதனால் சரீரபுஷ்டி உண்டாம், இது ஜீரணிக்க நாழிகைசெல்லாது, அரோரூட் அல்லது குவாக் கிழங்குமா நான் கொடுத்தனுப்புகிறேன். கதிர்வேலுக்கு வியாதி கண்டு நாட்பட்டதா," என்று கேட்டுவிட்டுப்போக எத்தனித்தாள். "ஆம் அம்மா, அவன் வியாதியில் விழுந்து பதினாறுநாள் ஆகிறது. இப்பொழுது உள்ள வருத்தம் இதற்குமுன் இல்லை," எனச் சுப்பம்மாள் உத்தரம் சொல்லக்கேட்டு, பச்சையம்மாள் "அப்படியானால் பத்துநாள் முந்தி ஏன் எனக்குச்சொல்லி அனுப்பவில்லை," என்று கேட்க, "சுப்பம்மாள் சொல்லி அனுப்பாதது என்குற்றந்தான், ஆனாலும் ஒன்று சொல்லுகிறேன், பச்சையம்மா, குறைநினைக்க வேண்டாம். என்போலும் எழுத்தறியாப் பேதைகளுக்கு வியாதியின் குணம் குறி சந்தேகமறத் தெரியுமா? மூக்கைப் பிடித்தால் வாய்திறக்கத் தெரியாத பேதை நான். பிள்ளைக்குச் சொற்ப ஜலதோஷம் கண்டிருக்கிறதென்றும், வினாவில் சொஸ்தமாய்விடுமென்றும் நினைத்து அஜாக்கிரதையா யிருந்துவிட்டேன்; இந்த விபரீதம் வரு

மென்று அறிந்தேனுனல், பத்துமாசம் சுமந்து பெற்றெடுத்த பாலகனுக்கு துரோகம் செய்வேனு," எனச் சொன்னுள். அப்புறம் இருவருக்கும் நடந்த சம்பாஷணை அடியிற்காண்க:—

**பச்சையம்மாள்.**—கதிர்வேலுக்கு முன் எப்பொழுதாவது நளிர்ஜுரமும் கண்டதுண்டா?

**சுப்பம்மாள்.**—ஆம், நளிர்ஜுரம் கண்டது. அப்பொழுது என் மகன் பட்டபாட்டை என்ன சொல்லி ஆறுவேன். சர்வாங்கமும் உதற, குளிர் அவனை விடவிடென்று குலிக்கிவிட்டது, பல் கிட்டியது, தொட்டால் கை கொப்புளிக்க, காய்ச்சல் உலையில் மூட்டிய நெருப்புப்போலக் காய்ந்தது.

**பச்சையம்மாள்.**—அப்பொழுதே வைத்தியனை வரவழைத்துக் காட்டவேண்டும். ஏன் காட்டவில்லை?

**சுப்பம்மாள்.**—இதெல்லாம் என்போலும் ஏழைக்கு எப்படித் தெரியும்? வைத்தியனை அழைத்தால் கை நிறையப் பணம் அள்ளிக் கொடுக்கவேண்டுமே. அதற்கு வகை இருந்தால் நான் இந்தத் தரித்திரநிலையில் இருந்து வருந்துவானேன்.

**பச்சையம்மாள்.**—வாஸ்தவந்தான். வைத்தியனை அழைக்கவும், மருந்துச்செலவு கொடுக்கவும் உமக்கு நிர்வாகம் இல்லை. வைத்தியசாலைத் தலைவருக்குச்சாக்ஷிப் பத்திரம் வாங்கிவர உம்மால் ஆகுமே. இதற்கு நாலு ஐந்து செலவழிக்க நிமித்தம் இல்லையே; வியாதியின் குணம் குறி தெரியாதென்று நீர் சொன்னது ஒப்புக்கொள்ளுகிறேன். கண்டஉடனே ரோகருணம் குறிகள்

இன்னின்ன வென்று வரையறுக்கக்கூடாது. ஆனது பற்றி அந்நோய்க்குக் கைகண்ட ஔஷதமுறை இன்ன தென்று உறுதி சொல்வது அபாயகரமாம். வியாதி தீர்ந்தாலும் தீரும். மருந்து நோயாளிக்கு வினையாக நேர்ந்தாலும் நேரும். ஆனாலும் உடலைப்பற்றிய தாப சுரத்திற்கு இன்றியமையாத குறிகள் சில உண்டு. அவை குளிர், காய்ச்சல், இறைப்பு, நடுக்கம், கைகால் குடைதல், ஜன்னி, மயக்கம், இந்த குறிகளைக்காணும். அப்பொழுதே ஜாக்கிரதையாய்ச் சிகிச்சை செய்ய வேண்டும். ஏனோதானோவென்று இராமல் ஜனங்கள் மேற்குறித்தகுணம்கண்டவுடன் வைத்தியரை அழைத் துக்காட்டுவார்களானால், நோயாளிகள் வெகுபெயர் தப் பிப் பிழைப்பார்களே. அன்றியும் அஜீரணமுதலிய அற்பகாரணங்களால் குழந்தைகளுக்கு ஏதாயினும் அசௌக்கியம் காணும்பொழுது தாய்தந்தையர்கள் தீராக் கொள்ளைநோய் ஏதோ உண்டாகப்போகிற தென்று திகில்பிடித்து நடுநடுங்க நிமித்தம் இராதே.

சுப்பம்மாள் வீட்டினின்று புறப்படும்பொழுது, பச்சையம்மாள் பெருமூச்சுவிட்டாள். காற்றோடுக்க மான அவ்வீட்டைவிட்டு வெளிமுற்றத்தில் போனது அவளுக்குப் பிராணகண்டம் தப்பிப் பிழைத்ததுபோ லிருந்தது. பின்பு துணிமூட்டைக்குள் வைத்திருந்த காடிப்புட்டியை எடுத்து வாய்க்குள் சிறிதுவிட்டு, நன் றாய் அலசிக் கொப்பளித்து, ஐந்தாறுதுளி விழுங்கி னாள். தொத்துவியாதி தவிர்க்க இதற்குமிஞ்சின எளிய மருந்து இல்லையென்று பச்சையம்மாளுக்கு அனுபவ

சித்தமாகத் தெரியும். அப்பால் அவள் துரிதமாய் நடந்துபோய், வீடு சேர்ந்தவுடன் உடுத்தபுடவைகளை ந்து, மாற்றுவஸ்திரம் தரித்து, மறுபடியும் வைத்தியஞ் செய்யப்போனாள். போகு மார்க்கத்தில் பின்னும் ஒரு வீட்டில் ஒருபெருமாட்டியைக் கண்டு பேச நேரிட்டது. அந்தத்தலைவி வசிப்பது செட்டித்தெருவிற் பெரிய மெத்தைவீடு. நோயால் வருந்தும் ஏழைகளைப் போய்ப் பார்த்து வீட்டுக்குத் திரும்புமார்க்கதில் அந்த மஹா ராஜியை பச்சையம்மாள் முன்னும் இரண்டொரு ஆவர்த்தி கண்டதுண்டு. இந்த மெத்தைக்கும் பச் சையம்மாள் வசிக்கும் மேன்மாடத்தின் சிற்றறைக் கும் அஜகஜாந்தரம்; குபேரசம்பத்துள்ள பெரியோர் வாசஸ்தானங்களின் அலங்காரத்தை வர்ணிக்க நிமித் தம் இல்லையே. செல்வப்பொருள் வகையனைத்தும் அங்கிருந்தனவென்று சொல்லினும் பொருந்தும். இது நிற்க, பச்சையம்மாள் கனமும் தனமும் மிகப் பெறறவ னைக்கண்டு ஒரு விதமாகவும், புகழின்றிப் பொருளின் றிப் பொழுது கழிக்கும் எளியோனைக் கண்டு ஒரு வித மாகவும் நடப்பவளல்ல. அவளுக்கு எத்திறத்தோரும் சமானர். அவள் "ஊருஞ்சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப் பெற்ற, பேருஞ்சதமல்ல, பெண்டீர்சதமல்ல, பிள்ளைகளுஞ், சீருஞ் சதமல்ல, செல்வஞ் சதமல்ல தேசத்திலே, யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சியே கம்பனே" என்றொருவர் மொழிந்தபடி கடவுள் திரு வடிச்சேவை ஒன்றே பரலோகவழிக் குதவும்; அது குன்றாச் செல்வமென்று எண்ணி, அனுதினமும் பரத்

தில் சிந்தையை வைத்திருந்தாள். அவள்தேடிவைத்தது திருடர் தீண்டாரொக்கம் அங்கிருந்தது. தெய்வம்தொழுவதும், பிறர் துயரைத்தன் துயராகப் பாவித்துத் தன்னுல் ஆகும் உதவி அவர்களுக்குச் செய்வதும் இப்பூவுலகில் இருக்குந்தனையும் தன்கடமையென்று அவள் நினைத்து, யாவருக்கும் ஏகரீதியாக நடந்தாள். பச்சையம்மாளை பணிவிடைக்காரி பெருமாட்டி வசிக்கும் அந்தப் புரத்தில் அழைத்துக்கொண்டு போய்விட்டபொழுது, ஆடு நாற்காலியில் உட்காந்து நளச்சக்கரவர்த்திகதை வாசித்துக்கொண்டிருந்த தயாசிந்தையுள்ள தலைவி புஸ்தகத்தைப் பீடத்தில் வைத்துவிட்டு எழுந்தாள். பின்பு இருவருக்கும் நடந்த சம்பாஷணை இதன் அடியில்காண்க:—

**பெருமாட்டி.**—வந்தீரா பச்சையம்மா. என்சொல்லை நன்குமதித்து இத்தனை விரைவில்வந்தது மிக்க உபகாரம். ஒரு யுக்திகேட்க வரவழைத்து உமக்குச் சிரமம் தந்தேன்.

**பச்சையம்மாள்.**—இதுதானு, சந்தோஷம். பின்னிட்டுச் சிறிதுகாலம் தம்மைக்காண எனக்குச் சந்தர்ப்பிக்கவில்லையே. சடிதியில் அழைத்ததனுல் சரீரசௌக்கியத்தாழ்வு நேரிட்டதோவென்று சந்தேகித்துக் கவலையுற்றேன். தம்மைக் கண்டு, தமதுவாய்ச்சொற் கேட்கவும், என்சந்தேகந்தெளிந்தது.

**பெருமாட்டி.**—வீட்டில் பிள்ளைகள் சற்று அசௌக்கியமாயிருந்தன. அதனுல் வெளிப்படச் சிலநாள்வரையில் அவகாசம் இல்லை. ஆனுலும் பிள்ளைகளைக்குறித்து

ஏதும்சொல்ல வரவில்லை. நானும்மை வரவழைத்தது என் சேவகத்தில் இருக்கும் சிறு பெண்ணொருத்தி நோயாளிகளை உபசரிக்குமுறை பயில மிகவும் அபேக்ஷித்திருக்கிறாள். அவளை ஏதாயினும் ஒரு துறையில் விர்த்தி அடைவித்து, நாளை நாலுபெயருக்கு உபகாரம் செய்யும் யோக்கிதையுடையவளாக்க விரும்புகிறேன், இதைப்பற்றி உம்மைக் கண்டுபேசி அட்டைவிடுவது, காயங்கட்டுவது, காரம்வைத்துக் கொப்புளிக்கச்செய்து ரணம் ஆற்றுவது முதலிய சாமானிய சிகிச்சைகள் நீர் செய்வதைக் கண்டு கைப்பழக அந்தப் பெண்ணை நீர் போகவர இருக்கும் நோயாளிகள் வீட்டுக்கு அழைத்துப்போக சம்மதிப்பீராவென்று உம்மைக் கேட்டுச் சொல்ல நான் அவளுக்குச் சொல்லியிருக்கிறேன். பெரும்பாலும் வியாதிகளுக்குச் சாமானிய உபசாரம் செய்யும்வகை நமது வேலைக்காரிகளுக்குச் சுத்தமாய்த் தெரியாது. நான் சொல்வது உமக்கு ஆச்சரியமாயிருந்தாலும் இருக்கும். நாலைந்து தினத்திற்குமுன் ஒரு ராத்திரி என் சமையற்காரி உடம்பு சௌக்கியமில்லாதிருந்தாள். வைத்தியர் வந்து பார்த்து, அட்டைவிடச்சொல்லிப்போனார். இங்குள்ள வேலைக்காரிகள் ஏழெட்டுப் பெயரில் ஒருத்திக்காவது அட்டை பிடித்துவிடத் தெரியவில்லை. அவர்கள் அட்டையைக் கையால்தொடவும் துணியவில்லை, கைகூசிப் பின்னிட்டார்கள். அப்புறம் செய்வதென்ன? அர்த்தராத்திரியில் ஆளைக்கூப்பிடலாம். நானே சமயலறைக்குப்போய், அட்டை பிடித்துவிட்டேன்.

(தலைவி சொன்னதெல்லாம்கேட்டு புன்னகை நகைத்து.)

**பச்சையம்மாள்.**—சீமாட்டி, யுக்தி புத்தியின் உதவியில்லாதவர்களாய் எவரும் எளிதிற்செய்யத்தக்க அற்ப உபசாரங்கள்கூட நான் அன்றன்று போக்குவரவில் காணும் எளிய ஜனங்களுக்குத் தீர்ப்பாய்த்தெரியாது. இது அறிந்தால் தமக்கு ஆச்சரியமாயிராது. இத்தனை சீர்கேடு நேரிடுவதற்கு நிமித்தம் பெண்களுக்கு இளமையில் கல்வி கற்பிக்காதிருப்பதே. நம் தேசத்தார் இளமையில் பெண்களுக்குக் கைதட்டிக் கூத்தாடி சுழன்றும் கால்மாற்றியும் தீவரமாயும் தாமதமாயும் பலவாறு கும்மியடிப்பது, கும்மிபாடுவது, சோபனப் பாட்டு பாடுவது, ஊஞ்சலாடுவது, உலாப்பாடுவது முதலிய நாகரீகமான விளையாட்டுகளை முயற்சிசெய்து வழக்கப்படுத்துவார்கள். இவைகளில் தேர்ச்சி அவர்களுக்கு வருவிப்பது அவ்வளவு அவசியமல்ல. தானே வந்துவிடும். இவைகளைவிட மேலான பயனைத்தரும் வேறு காரியங்களுண்டு. யாவருக்கும் கண்ணெனத்தகும் எண்ணும் எழுத்தும் ஒருவாறு கற்பித்தபின், வாழ்க்கைப் படும்பொழுது தங்கணவருக்கும், தாய்மாராகும்பொழுது பிள்ளைகளுக்கும் அயலார் சுற்றத்தார்களுக்கும் பலவாறு உபகாரிகளாவார்கள். இதை மறந்து ஆடல் பாடல் முதலிய காலவிரயம் அனுதினமும் நடக்கிறதே! நெருப்புச்சூடு, கத்திவெட்டு, நரம்புச்சுளுக்கு, எலும்பு முறிவு, நெரிவு முதலிய விபத்துகளோ, ஒன்றில்லாவிடில் ஒன்று பிரதிதினமும் உண்டாகும்; நிர்மூடர்களாயிருக்கும் பெண்பாலாள் இவ்விபத்துகளுக்கு சிகிச்சை

செய்ய வகை அறியாமல் தடுமாறுவார்கள். கற்றறிந்து கைம்மருந்துசெய்யப் பயின்றவர்களோ அதற்கு ஏற்கும் சிகிச்சைசெய்து, வெகு ஜநோபகாரிகளாவார்கள். பெண்கள் கல்விகற்கத் தனவான்களாவது துரைத்தனத்தாராவது பாடசாலைகள் எங்கும் ஸ்தாபிக்க வேண்டும். அப்பாடசாலைகளில் கல்வித்துறைகளன்றி, நோயாளிகளுக்குச் சிகிச்சா உபசாரம்செய்யும் விதிகளையும் கற்பிக்கப்படுவது அவசியம். இவ்விதிகளைக் கற்பது கஷ்டமல்ல. எளிதில் எவரும் அதிக செலவின்றிப் பயிலக்கூடும். இப்பயிற்சி இல்லாததுபற்றி அங்கங்கே எத்தனையோ பெயர் இறந்துபோயினரென்று எண்ணுகிறேன்.

**பெருமாட்டி.**—உமது வித்தியார்த்தினிகளுடன் என்னைச் சேர்த்துக்கொள்வீரானால், நானும் உம்மிடத்தில்வந்து சிகிச்சா உபசாரவிதிகளைக் கற்க விரும்புகிறேன். "நல்லது காரச்சீலைபோட்டுக் கொப்புளிக்கப் பண்ணிக் கொப்புளத்தை ஆற்றுகிறதுண்டல்லவா அதற்கு உத்த வகை என்ன சொல்லும் கேட்போம். உமது முறையும் எனது முறையும் ஒன்றோ வேறோ பார்ப்போம். உம்முடைய அனுபோகம் எனக்கு உண்டென்று நான் எண்ணவில்லை" என்றாள்.

**பச்சையம்மாள்.**—என்றால் ஒரு விசித்திரமும் இல்லை அம்மா. தமக்கு அது எளிதில் கைவரும். காரச்சீலையின் மத்தியில் நாலைந்து துளி காடிவிட்டு, விரனுனியால் நன்றாகத் தேய்த்து, அப்புறம் வேண்டும் இடத்தில் போடவேண்டும். காரச்சீலை நிலைபெயரா

திருக்கவும் வருத்தம் தாங்கத் தக்க வலிமையுள்ளவர் களுக்குச் சில வேளை சேர்வைக் கட்டுப்போடுவதும் உண்டு. ஓரிடத்தில் அடங்கி யிராமல் உடம்பதிர ஆடி அலைந்து திரியும் பேயர்களுக்கன்றி, மற்றவர் களுக்கு இது வேண்டுவதில்லை. சீழையும் நீரையும் அறவாங்கியபின், பெரும்பாலும் காரச் சீலைதானே நெகிழ்ந்துவிழும். அது வலிய விழுந்தாலும், அதை ஒருவர் விழுத்தினுலும், அந்த க்ஷணமே நோயாளி மூர்ச்சையாய்ச் சோர்ந்து விழுவதும் உண்டு. அதனுல் அந்த சமயத்திற்கு உதவும்படி பிரான்தியும் நீருமா வது, ஏதாயினும் எளிய அமிர்த சஞ்சீவியைப்போல வாவது ஒன்றை கைத்துணையாக வைத்திருக்க வேண்டும். நிமித்தம் இல்லாவிடில், கொடுக்கவேண் டுவதில்லை. காரத்தாற்புறப்பட்ட கொப்புளத்தில் தோல் சிறிது மேலே எழுந்திருக்கும். அந்தத் தோலைக் கூர்முனையுள்ள கத்திரிக்கோலால் நாலு மூன்றிடத் தில் சாவதானமாய்க் கத்திரிக்கவேண்டும். கத் திரிக்குமுன் கொப்புளத்தின் அடித்தோலில் படியச் சுத்தமான மெல்லிழைத் துணிவைத்துப் பிடித்துக் கொள்ளவேண்டும். எழுந்த தோலை அளவு கடந்து கத்தரிக்கப்படாது. உப்பலாகயிருக்கும் கத்தரித்தால், பின்பு தப்பாமல் விரணம் உண்டாம். தோலைக் கத்தரிக் கவும், கொப்புளம் உடைந்து நீர் குபீரென்று வடியும். மேற்சொல்லிய ஒற்றுடையால் அதைத் தடுத்துப் பின்பு நீரிற் கிளறிய இளஞ்சூடுள்ள மிருதுவான ரொட்டிமாவை வைத்துக் கட்டினுல், தங்கு நீரைச்

சற்றும் விடாமல் அது பீரித்து, அன்றியும் உலர்ந்து நெகிழ்ந்த தோலே உரிந்து விழப்பண்ணும், அது உரிந்து விழாமல் தொங்கியிருக்குமானுல் எதிலாயினும் கொளுஇழுபட அடித்தோல் உரிந்து காயமும் விரணமும் உண்டாம். கட்டின ரொட்டிமா நெகிழ்ந்து விழுந்தபின் வெண்ணெயாவது, ஏதாயினு மொருதைலமாவது மெல்லிழைத் துணியில் பூசிப்போட்டால் விரைவில் புண் ஆறிப்போம்.

பெருமாட்டி.—கொப்புளித்த புண்ஆற்ற வெண்ணெய் தடவுகிறுர்களா, பச்சையம்மா அதற்கு ஏதோ ஒரு தைலம் விற்கிறதென்றல்லோ இருந்தேன்.

பச்சையம்மா.—அந்த தைலம் வெண்ணெயிற் செய்கிறதுதான். இந்த வைத்தியசாலேயில் நாங்கள் பெரும்பாலும் புண்ஆற்றுமருந்தாகவழங்குவது வெண்ணெய். எளியவர்களுக்கு எப்பொழுதும் நான் புண்ணுக்குத் தடவச்சொல்வது அதுவே. வெண்ணெய் எங்கும் உண்டு. வேண்டும்பொழுது அகப்படும். எளிய மருந்தே பெரும்பாலும் நோயைத்தீர்க்கு மருந்து.

பெருமாட்டி.—சிலவேளே நீர் மிகு நெருக்கமா யிருக்கும் வீட்டுக்குப்போக நேரிடுமே. பச்சையம்மா!

பச்சையம்மாள்.—ஆமாம், போவது உண்டு. அவ்வீடுகளின் சீர்கேட்டைத் தாம் கண்டதுமில்லே, நினேத்ததுமில்லே யென்று எண்ணுகிறேன். ஏனென்றுல் துர்க்கந்தம் குடிகொண்டு மண் அடைந்த ஜலதாரையும் நன்றுய்ச் சுத்திசெய்யாத நிர்ப்பந்தமான வீடுகளில் சில மனுஷர் வாசஞ்செய்து ரமித்திருக்கிறுர்களே. அவர்கள்

கதியை நினைக்க வருத்தமா யிருக்கின்றது. பிடிக்கும் அற்பசெலவைப் பெரிதென்று எண்ணுமல், கொஞ்சம் சவர்க்காரமும் சப்பும் வாங்கித் தண்ணீருடன் உப யோகித்து வழக்கப்படுவீர்களானல், அப்புறம் என் சொல்லினருமை உங்களுக்குத் தெரியு மென்றும், திரவியம் ஒன்றுக்கு ஒன்பது பங்கு மிஞ்சுமென நீங்களே அறிவீர்களென்றும் நான் அவர்களுக்கு வெகுமுறை சொல்வது உண்டு.

சென்ற வருஷம் நடந்த சங்கதி ஒன்று இதற்குச் சரியான திர்ஷ்டாந்தம்; அதைச் சொல்லுகிறேன். சிந்தாத்திரிப்பேட்டையில் இருக்கும் மாணிக்கம் ஒரு நாள் என்னை வைத்தியம் பார்க்கத் தன் வீட்டுக்கு அழைப்பித்தாள். போயிருந்தேன் அவ்வீட்டில் குப்பை யும் கூளமும் அரை அடி யுயரம் அடைபட்டிருந்தன. பலகணிக் கதவுகள் திறக்காதபடி ஆணி அறைந் திருந்தது. அவ்வீட்டறை மிகவும் காற்றெடுக்க மானதாயிருந்தது. அதனல் பல கணியில் ஆணி அறைந்து இரண்டு மூன்றுவாரம் இருக்குமென்று உத்தேசிக்கிறேன். அக்குடும்பத்தில் கட்டி, சுரம், ஜலதோஷம், வயிற்றுவலி முதலிய பிணிகளால் வருந் தாதவர்கள் ஒருவருமில்லை என்று மாணிக்கம் மனத் துயருடன் சொன்னள். அதற்கு நான் வியாதிகள் பலவும் இவ்வீட்டில் குடிகொண்டதைப் பற்றி அதி சயப்படுவானேன்? நீங்கள் இருக்கும் இவ்வறையில் சுவாசிக்க உதவாத அடைகாற்றெழிய, சுத்தியான நடைக்காற்றுக் கிஞ்சித்தும் இல்லையே, என்றேன்.

அது கேட்டு, மாணிக்கம், "எனக்கு இந்த நுட்பங்கள் எப்படித் தெரியும்? நான் கற்றறியாப் பேதை" ஆச்சுதே என்று உத்தரம் சொன்னாள். "நல்லது, நீ கல்வி கற்றவளல்ல வென்றுதான் எண்ணுகிறேன். ஆனாலும் என்ன? நாம் சுவாசிக்கும் காற்று நமது ஜீவனுக்கு ஆதாரமென்று அறியக் கல்வி கற்றுத் தெளியவேண்டுமோ? காற்றடைப்புள்ள ஒரு பெட்டிக்குள் உன்னைவிட்டுப் பூட்டினால் இறந்து போவாயல்லவா" என்று கேட்டேன். "ஆம், மூச்சு அடைத்து இறந்துபோவேன்" என்று மாணிக்கம் மறுமொழி சொன்னாள். பின்பு நான், "சொல்லக் கேள் மாணிக்கம். உடம்பாகிய இவ்வறையும் ஒரு பெட்டிபோலவே இருக்கின்றது. இதில் வசிப்பவர்களுக்குச் சுகம் உண்டாகத் திவ்யமான சுத்தவாயு உலாவ வேண்டும். நாம் சுவாசம் வாங்கும் பொழுதெல்லாம் காற்று உட்சென்று, சுவாசாசயத்தில் சேர, அங்கிருந்து அசுத்தமாகி விஷக் காற்றாக சுவாசம் விடும் பொழுது வெளிப்படும். ஆகவே சுத்தமான வாயு தாராளமாய் உட்சென்று உலாவவிடாமல் அறையைச் சந்து பொந்தில்லாதபடி அடைத்துவைத்தால், அதில் இருப்பவர்கள் உள்வாங்கிவெளியில் தள்ளிய அசுத்தமான விஷக்காற்றையே மீண்டு மீண்டும் உட்கொள்வார்களே. அதனால் அந்தக் காற்று மென்மேலும் விஷமாய் விடும். இம்மாத்திரம் உனக்குத் தெரியாதா? இது அறியக் கல்வித் திறம் வேண்டுமோ? சாதாரணமான புத்தியுள்ள எந்த மனுஷருக்கும் இது தெரியுமே"

என்றேன். அப்போது மாணிக்கம் "இது எனக்குச் சந்தேகமற்று மனம் தெளியத்தெரிகிறது" என்று உத்தரம்சொன்னாள். அப்பால் நான் "காற்று நமக்கு ஜீவாதாரமென்று கடவுள் அருளிய சொத்து. இச்சொத்தை யாவரும் அனுபவிக்கவேண்டு மென்பது அவருடைய அபிப்பிராயம். அல்லாவிடில், பகாவன் காற்றைச் சிஷ்டிக்க நிமித்தமில்லையே. இத்தகைமையுள்ள ஜீவசாதனமான காற்று இவ்வறைக்குள் வருவழி பலகணிகள் பலகணிக் கதவுகளை அடைத்துவிட்டால், அப்புறம் இங்கிருப்பவர்கள் சுகித்திருக்க வகை இல்லையே. எவருக்கும் உரியனராகிய இப்பொதுச் சொத்தை வம்புத்தனமாய் விலக்கியதினால் உங்களுக்கு நேரிட்ட சௌக்கியக்குறைவைக்கண்டாயே. நல்லது காற்றானது தடையின்றி நுழைந்து நன்றாய் வீசப் பலகணிக்கதவைத் திறந்துவிட்டுப் பரீக்ஷைபார்ப்போம், என்று சொல்லி, அறைந்த ஆணிகளை இருவரும் வருத்தப்பட்டு கழற்றிக் கதவைத்திறந்தோம். விரைவில்காற்றுநுழைந்து, எங்கும் வீசிற்று. அதன் நலம் அந்தக்ஷணமே பிரத்தியக்ஷமாகத் தெரிந்தது. அது வரையில் அவ்வறைக்குள் சோர்ந்து மெலிந்துபடுத்திருந்த பிள்ளைகள், மழை அடித்து வருஷிக்கும்பொழுது வாடிக் குவிந்து தரையிற்படிந்திருக்கும் மலர்கள் மழைவிடவும் வாட்டமற்று, குவிந்த இதழ்களெல்லாம் விரிந்து நிமிர்வது போல, களை தெளிந்து தலைநிமிர்ந்து பார்த்தார்கள். அவர்கள்முகத்தில் ஜீவகளை தோன்றிற்று. இவ்வாறு நடைக்காற்றை உட்செலுத்தியபின் கொஞ்சம் தண்ணீ

ரும் கொண்டுவரச் சொன்னேன். மாணிக்கத்திற்கு அது மிகு தொல்லையாக இருந்தது. உடம்பில் அற்ப அழுக்கு இருப்பதனால் பழுது என்னவென்றாள். நான் அவள் வார்த்தையை தடுத்து, "மாணிக்கம் சரீரம் வெயர்க்கிறது என்று சொல்லுகிறார்களே. அது அறிவாயா என்றேன். "ஆமாம்" என்று உடனே விடை கொடுத்தாள். அதுகேட்டு, "நல்லது, உடம்புவெயர்க்கிறது உனக்குத்தெரியுமே. அவ்வெயர்வை உடம்பினுள்ளிருந்து வெளிப்படும் அழுக்குநீரென்று அறியாய் போலும். உன்பிள்ளைகள் உடம்புத்தோலின் உரோமத் துவாரங்களில் ஊத்தைசேர்ந்து அடைந்துக்கொள்ள விடுவாயானால், உடம்பினுள் இருக்கும் அசுத்தநீர் வெளிப்பட வழியின்றி உள்ளடங்கி, அங்கிருந்து எண்ணித்தொலையாத பிணிகளை உண்டாக்குமே, இதற்கு என்ன சொல்லுகிறாய்" என்று வினவ, மாணிக்கம், "நீர் சொல்வது மெய்யாகத்தான் இருக்க வேண்டும். உள்ளதைச் சொன்னால் உடம்பெல்லாம் நோவானேன். நான் இதைப்பற்றி ஒரு பொழுதும் தீர்க்க சிந்தனை செய்தறியேன்" என்றாள். பிற்பாடு "ஒன்று கேள், மாணிக்கம்! நான் சொல்லுவது மந்திரமல்ல, மாயமல்ல. இதன் மெய் பொய் நீயே பரீக்ஷித்தறியலாம். மனுஷஜாதியானாலும்சரி, மிருக ஜாதியானாலும்சரி உடம்பிற்சிறிதும் அழுக்குப்படியா திருந்து, சுத்தமான காற்று வுலாவும் இடத்திற் சஞ்சரித்தால், இதனால் வரும் சுகம் ஒரு பங்கு, உணவுமுதலிய உண்டியால்வரும்சுகம் ஒரு பங்கு ஆக இருவிதசுகமும்

உண்டாகும். சரீரசுத்தியும் காற்று நலமுமுள்ளவர் களுக்கு மிதமான உண்டிபோதும்" என்று சொல்ல, மாணிக்கம் "என் பிள்ளைகளுக்கு ஸ்நாநம் செய்து வைத் தால், அவர்கள் உண்டி சுருங்குமென்று சொல் லுகிறீரா?" என்று கேட்டாள். அதற்கு நான் "உறுதி சொல்வது கஷ்டம். பிள்ளைகளுக்குப் பசி தீபனம் அதிகம். அது ஒன்று நிசம். சரீரசுத்தியும் பிள்ளைகளை வளர்க்கும், உடம்புக்குப்பலம் உண்டாக்கும், உல்லாச மும் களிப்பும் தரும், உண்டிச்சிலவைச் சுருக்காவிடி னும், வைத்தியர் கூலியையும் மருந்துச் செலவையும் சுருக்கிவிக்கும். நல்லது நீ ஒரு மாசவரையில் பல கணிகளைத் திறந்துவிட்டு, பிள்ளைகளுக்குப் பிரதி தினமும் உடம்பு குளிக்கவார்க்க உடன்படுவாயானால், செல்லும் சீக்காய் அல்லது சப்பு என்னும் சுவர்க்காரம் ஒற்றுடையும் நான்தருவேன். அதனால் இந்த மாச முடிவில் உண்டாகும் நயநஷ்டத்தை இருந்தறிவோம்" என்று சொல்ல, அதற்கு மாணிக்கம் சம்மதித்துச் சொற்படி செய்தாள். அந்த மாசமுடிவில் அவள் பிள்ளைகளுக்கு அற்புதமான அழகும் முகக்களையும் அவர்களுக்கு வளர்ச்சியும் சரீரபுஷ்டியும் உண்டா யிருந்தன. அவர்களைப் பார்க்கப் பார்க்க, சீக்காய்க்கும் சப்புக்கும் தண்ணீருக்கும் இத்தனைசுகிர்தம் உண்டோ வென்று மாணிக்கமிக்க அதிசயம் கொண்டவளாய் அவள் அதை எனக்குத் தெரிவித்தாள். பின்பு இந்த நல்லவழக்கத்தை அவள் எந்நாளும் கைவிடவில்லை. அவள்தான் ஒரு வேளை மறந்துவிடினும், சௌக்கி

யத்தைக் கண்டபிள்ளைகள் சரீரசுத்தி செய்யத்தாமே முந்திக் கொள்வார்களென்று உறுதியாக நம்பினள். அன்று தொடங்கி அந்தக் குடும்பத்தார் அனைவருக்கும் மேலு மேலும் சௌக்கியமும் கௌரவமும் உண்டாயின. "முதலாவது தெய்வபக்தி, இரண்டாவது தேகசுத்தி" எனும் நீதிசொல்பவர் சொல்லக்கேட்டிருக்கிறேன். இவ்வாக்கியம் மிகவும் சிறந்ததுதான் இதன் அர்த்தம் விஸ்தாரம் அநேகருக்குத்தெரியாது. தெய்வபக்தியும் தேகசுத்தியும் இடக்கைக்கு வலக்கைபோல் ஒன்றுக் கொன்று இளைக்காமல் இணைந்து செல்லும் தகமையுள்ளவைகள். சரீரம் புனிதமாயிருக்கும்பொழுது மனிதருக்குத் தர்மசிந்தை உண்டாவதும், சேற்றில் புரளும் பன்றிகள்போல் ஊத்தைமயமா யிருக்கும்பொழுது தர்மசிந்தனை அவ்வளவு இல்லாதிருப்பதும் அனுபவசித்தமாய் அறிவோமே. ஆனாலும் புத்தி புகட்டி எளியவர்களைச் சுத்தியாயிருக்கச்செய்வது கஷ்டம். வெகுபேருக்குத் தேகசுத்தி சாதாரணமாகவே ஆகாது.

பெருமாட்டி.—காற்றோட்டமில்லாமல் அழுக்கடைந்திருக்கும் எளியோர் வீடுகளுக்கு நீர் அச்சமின்றிப் போய்வருகிறீரே. வியாதிதொத்தாதா?

**பச்சையம்மாள்.**—ஆம் தொத்துவியாதிக்கு அஞ்ச நிமித்தம், எப்பொழுதும் உண்டு. ஆனாலும் சிகிச்சா உபசாரம் செய்து நாள்கழிக்கும் என் போலியர்களை விசேஷமாய்த் தெய்வம் சித்தம் இரங்கிக் காப்பாற்றுவாரென்று எனக்கு உறுதி உண்டு. ஒருவேளை நான்

மூடபக்தியால் இப்படி நினைத்தாலும் நினைக்கலாம். ஆனாலும் நான் ஒன்றும் அறியேன். தெய்வத்திற்கே யாவும் மயக்கமறத்தெரியும். தெய்வம் காட்டியவழியில் குற்றேவல் செய்வது எனக்குத்திருப்தியான காரியம். நோயினால் வருந்தும் உயிர்களிடத்தில் அன்பில்லாத உயிர்வாழ்க்கை என்னவாழ்க்கையம்மா, "அறிவினால் ஆகுவதொன்றுண்டோ; பிறிதிநோய் தன்நோய்போல் போற்றாக்கடை" என்றும் "அன்பின்வழியது உயிர்நிலை; அஃதிலார்க் கேன்பிதோல் போர்த்த உடம்பு" என்றும் நாயனார் நீதிவாக்கியம் கேட்டிருக்கிறோமே. கடவுளை நம்பினோரை கைவிடப் படார் என்றாள்.

பெருமாட்டி.—மெய்தான், பிணியாளரை உபசரிக்கும் பேருக்குத் தேவசகாயம் விசேஷமாய் உண்டென்று நீர்சொல்வது வாஸ்தவமென்றே நம்புகிறேன். ஆனாலும் தொத்துவியாதி தவிர்க்க மனிதருக்கு அமையும் உபாயம் யாதும் செய்யாமல் விடுவது புத்தியல்லவே.

**பச்சையம்மாள்.** — புத்தியல்ல, இதற்கும் ஐயம் உண்டா? எந்த அபாயத்தையும் வலுவில் வருவித்துக்கொள்ளாமல் நான் எப்பொழுதும் ஜாக்கிரதையாயிருக்கிறேன். ஆகாரம் உட்கொண்டு பசியாறியபின் போவதேயொழிய அதற்கு முன் நோயாளி படுத்திருக்கும் அறைக்குள் நான் போகிறவழக்கமே இல்லை. போனால் காற்றுவீசுகிற முகமாய் நின்று நோயாளியைப்பார்ப்பதேயல்லாமல் காற்றுக்கு எதிர்முகமாய்

நின்று பார்க்கிற வழக்கமேயில்லை. அதாவது நோயாளி உடம்பிற் பட்டகாற்று என்னைத் தாவும் பக்கத்தில் நான் ஒருபொழுதும் நிற்காமல் என் பக்கத்திலிருந்து காற்று செல்லும் வழியில் நிற்பேன். அன்றியும் நான் சிகிச்சை செய்யுமிடங்களி ளெல்லாம் வேனிற் காலத்தில் பல கணிகளைத் திறந்து வைக்கும்படியாகவும் மாரிகாலத்தில் கதவு திறந்து முட்டுக்கொடுத்து நிறுத்தி வைக்கும்படியாகவும் அறைக்குள் குளிருக்காக கும் பிடுச்சட்டி நெருப்பு அணையாமலிருக்கச் செய்யவும் சொல்வது எனது வழக்கம். இதற்கு ஆக்ஷேபம் சொல்வாரும் உண்டு, நான் அதைக் கேட்கிறதில்லை. எவர்களுக்கும், எக்காலத்திலும், எவ்விடத்தும் சரீர சுத்திமிகவும் அவசியமென்று நான் வற்புறுத்திச் சொல்லி வருகிறேன். இதுதான் யாவரும் திட்டசட்ட மாய் அனுசரிக்கவேண்டிய முக்கியசாதனம். வீட்டின் அடித்தரையை அழுக்கறவிளக்கி, கட்டிலில் ஏறியிருக் கும் தூசியைத்தட்டித் தலையணை, மெத்தை, பாய் இவை களை உதறிச் சுத்திசெய்விக்க ஒருபொழுதும் பின்வாங்க லாகாது. கெட்ட நாற்றத்தைப் போக்கும் உவர்மண் சேர்ந்த சுண்ணும்புக்கும், வேறு சில காரமுள்ள பஸ்மங்களுக்கும் தொத்துவியாதியை நிவர்த்திக்க சக்தி உண்டு. சரீரசுத்திக்கும் தடையற்று வீசும் நல்ல காற்றுக்கும் சமானமாகிய உத்தமசாதனம் வே றேன்று உண்டா? நல்லது, அம்மா இனி நிற்க அவ காசம் இல்லை. உமக்கு என்னுல் ஆகவேண்டியகாரியம் மற்றென்றும் இல்லாவிடில், விடைதரக் கேட்கிறேன்.

லைத்தியசாலையில் வெகுபேர் என்னை வழிபார்த்திருப்பார்கள். நான் அறிந்த வைத்திய உபசாரம் எதையும் உம்முடைய சேவகத்தில் இருக்கும் சிறுமிக்கு மனப்பூர்வமாய்க்கற்பித்து வைப்பேன். உமக்கு ஒழிவான காலத்தில் அவளை என்னிடத்திற்கு அனுப்பிவையுங்கள். தொத்துவியாதியுள்ள இடங்களுக்கு நான் அவளை அழைத்துக்கொண்டு போகமாட்டேன்.

**பெருமாட்டி.**—இந்த ஏழைப் பெண்ணுக்குச் செய்யும் உபகாரத்தை என்றும் மறவேன். தயைகூர்ந்து செய்வதாக நீர் குறிப்பித்த பேருதவியைக்காத்திருந்து, உள்ளம் மகிழ்கூரப் பெற்றுக்கொள்கிறேன். அப்பால் நான் சொல்வது ஒன்றுமில்லை. உமது யுக்தப்படி செய்யும். உமது வாக்குறுதியை எப்பொழுதும் உண்மையாக நம்பத்தகுமென்று அனுபவசித்தமாய் அறிந்திருக்கிறேன். நான் செலுத்தவேண்டிய கடமை ஏதாவது இருந்தால் அதைச்சொல்லும்.

**பச்சையம்மாள்.**—எனக்கு வேண்டுவது ஒன்றுமேயில்லை; பிறருக்கு உதவிசெய்வதே எனக்கு என்றும் பிரீதி. நீங்கள் வரச்சொல்லி அனுப்பும் தக்ஷணமே தமது அண்டையில் வந்து சேருவேன்.

இவ்வண்ணம் இனிய வார்த்தைகளைச் சொல்லிச் செலவு பெற்றுக்கொண்டு பச்சையம்மாள் அவ்வீடுவிட்டு வெளிப்பட்டு வந்துவிட்டாள். "ஈசன் அடியார்க்குச்செய்யும் உதவி அடியார்க்கடியனாகிய ஈசனுக்கே செய்ததென்று அங்கிகரிக்கப்படும்" எனும் நீதிமொழி எண்ணுதிருக்கையில் மேற்படி பெருமாட்டி வாக்கிலே

தானேவந்தது. "இவ்வெளியமனுஷி, பந்து மித்திரர் ஒருவரும் இல்லாமலே தரித்திர நிலையில் இருந்தும், ஏழைகள் பிணிதீர்க்க இவ்வாறு உழைக்க, குலநலம், செல்வநலம், கல்வி நலம் அனைத்தும் பெற்றுச் சுகித்திருக்கும் நான், என்போலு மனிதரென்று உடம்பெடுத்தவர்களுக்கு என்ன உபகாரம் செய்துவருகிறேன்" என்றெண்ணி மேற்படி பெருமாட்டி மனத்துயர் அடைந்தனள். பின்பு, "பச்சையம்மாளைப்போல நானும் அங்கங்கே திரிந்து, பிறருக்கு உதவிசெய்ய எனக்கு மனோபலம் என்னும்வரம் தரவேண்டும்" என்று அவள் உள்ளத்தில் கடவுளைப் பிரார்த்தித்தாள்.

செல்வர் வறிஞர் இருதிறத்தோரும் பச்சையம்மாளைப்போல ஒழுகுவார்களானால் பயன் உண்டு. கடவுள் படைத்த இவ்வுலகில் மெய்வருந்தி உழைக்க விரும்பும் அனைவருக்கும் இடம் உண்டு. உழைக்கும் பொழுது ஒருவனை ஒருவர் தடுத்து விகாதம்செய்ய நிமித்தம் இல்லை. சோர்வில்லாதிருந்தால் அவரவர் உழைப்பிற்குத்தக்கபயன். காலத்திற் பெறுவது நிசமென்று யாவரும் நினைத்திருக்கலாம்.

இப்படி சம்பாஷணை நடந்த அத்தினத்தில் பிற்பகல் சற்று நாழிகை சென்று பச்சை அம்மாள் வைத்திய சாலைக்கு அடுத்த வீதி ஒன்றில் சற்று நாணயமான ஒரு வீட்டுக்குப் போனாள். அங்கிருந்த நாற்காலி, மணை, தவிசு கட்டில்முதலிய தட்டுமுட்டுகள் நாட்பட்டு தேய்ந்தவைகளாய் யிருந்தும், தூம்பு தூசி சிறிதுமில்லாமல், பரிசுத்தமாயிருந்தன. பிள்ளைகள் இரண்டு

மூன்றுபேர் தம் பாட்டில் தாமே விளையாடிக்கொண் டிருந்தார்கள். நடுப்பருவமுள்ள ஒரு மனுஷி சொல்லச் சொல்லக் கேளாமல் அழுது, அவள் பிராணனை வதைத் துக்கொண்டிருந்த ஒரு பிள்ளையை மாத்திரம் மடியில் வைத்துக்கொண்டு பீடத்தில் உட்காந்திருந்து தையல் வேலை செய்துகொண்டிருந்தாள். பருவம் முதிர்ந்த ஒரு கிழவி அவ்வறைக்குள் ஒரு மூலையில் கட்டிலுக்குப் பாரமாய்ப் படுத்திருந்தாள்.

பச்சையம்மாள் அவ்வீடுசேர்ந்தவுடன் "க்ஷேமமா, மங்கத்தம்மா, இன்றைக்கு உன் தாயாருக்கு உடம்பு எப்படி இருக்கின்றது. பார்த்துப்போக வந்தேன்" என்று சொல்ல, மங்கத்தம்மாள் "தாயாருக்கு இன்னம் அசௌக்கியந்தான்" என்று கேட்ட கேழ்விக்கு உத் தரம் சொல்லத்தொடங்கவும், குழந்தை பின்னும் அதிக மாய் வீரிட்டழுதது. மங்கத்தம்மாள் அதட்டி அழுகை யைச்சற்று தடுத்தபின் "தாயாருக்கு அதிக குளிரும் கை கால் விறைப்பும் உண்டானதனால், குளிர் அடங்கத் துணி நாலைந்து மடித்து நன்றாய்ப்போர்த்து வைத்திருக் கிறேன். இன்றைக்குச் சீதளம் உண்டாக நிமித்தம் இல்லையே" என்றாள்.

அது கேட்டு பச்சையம்மாள் கிழவி படுத்திருந்த கட்டில் அண்டையில் போய்பார்த்தாள். அந்தத் தள் ளாதவிருத்தை, கும்பலாய்க்குவித்த துணிச்சுமை தாங் கிக்கொண்டு, அப்படி இப்படி திரும்பக்கூடாமல் வருத் தப்பட்டாள். அவள் வருத்தத்தைக்கண்டு பச்சை யம்மாள் "ஐயோ பாவம்! ஒரு காரியம் தவறிப் போயி

ருப்பது எனக்குத்தெரிகின்றது; அநேகருக்கு இது வழக்கந்தான். உடம்புபோர்க்கும் துணிகள் ஒன்றின் மேல் ஒன்று எத்தனைசேர்ந்தாலும் அத்தனையும் குளிர் அடங்கி உடம்பு சூடுகொண்டிருக்குமென்று அவர்கள் எண்ணுகிறார்கள். இது தவறு. உடம்பிற்கு சூடு உண்டாக்குவது துணிச்சுமையால் அல்ல, துணிமடித்துப் போர்க்கும்விதத்தில் உபாயமொன்றிருக்கிறது. இந்தக்கம்பளி வெகு நாணயமாயிருக்கிறதே. எங்கே சம்பாதித்தாய்?'' என்று வினவினாள். "அது பார்வதி அம்மாள் கொடுத்தனுப்பியது" என்று மங்கத்தம்மாள் சொல்ல, பச்சையம்மாள் "இது மிக்க நாணயமாயிருக்கிறது. லக்ஷத்திற்கொருகம்பளி ஆதலால், பக்குவமாய் இதை உபயோகித்து வருவது அவசியம். பாட்டியம்மா, உன்னைப் பிடித்துச் சற்றுத் தூக்குகிறேன். உங்களுக்கு சம்மதியா" என்று கேட்டாள். கிழவி "அம்மா அதற்குத் தடைசொல்பவள் யார்? உடம்பு அசைந்து நோகாமல் ரோகிகளைப்பத்திரமாய் எடுக்கப் பிடிக்க உம்மைப்போலக் கைத்திறமுள்ளவர்களைக் கண்டதில்லை. உமது இஷ்டப்பிரகாரம் செய்யும்" என்று மனப்பூர்வமாய்ச் சொல்ல, பச்சையம்மாள் குழந்தையைப்பார்த்து, "அப்பா அழாதே, நீ நல்லபிள்ளை. உங்கள் அம்மாளை ஒரு நிமிஷநேரம் எழுந்து வரவிடு. நான் உன்னைச் சற்றுப்பொறுத்து எடுத்துக் கொள்ளுகிறேன். இப்பொழுது எனக்கும் உங்கள் அம்மாளுக்கும் இங்கொரு வேலை இருக்கின்றது" என்றாள். உடனே மங்கத்தம்மாள் ராஜு

வென்னுங் குழந்தையை நாற்காலியில் உட்கார வைத்து அது கொஞ்சங்கூட வருத்தம்கொடாமலும், வாய்விட்டழாமலும் சித்திரப்பிரதிமைபோல வைத்த இடத்திலேயே இருந்தது. அறிமுகமில்லாத பச்சை யம்மாளைக் கண்ணுக்கெதிரில் கண்டு பயந்ததனுலோ, பச்சையம்மாள் கொடுத்த மருந்திற்கு அஞ்சியதனுலோ அவ்வேளையில் அந்தக்குழந்தை தாயாரைத்தொந்தரை செய்யாமலிருந்தது. பின்பு மங்கத்தம்மாள் தன்னு டைய தாயார் படுத்திருந்த கட்டிலண்டைபோனுள். "எனக்குக் குளிர் வாங்காமலே கை கால் விறைக்கின் றது. இதற்குமுன் இப்படி இல்லை. என்ன விபரீதம் வந்திருக்கின்றதோ அறியேன்" என்று பெரிய மனுஷி சொல்ல, பச்சையம்மாள், "உனக்குமாத்திர மல்ல, வயசு அதிகப்படப்பட, யாவருக்கும் இவ்வித வருத்தம் உண்டாவது இயற்கைதான். பருவம் முதிர முதிரப் பலம் குன்றும், அங்கமெல்லாம் மெலிகிற நாள்களில் இரத்த ஓட்டம் குறையும், ஆகவே, ஏதும் பிறர் கையுபசாரமில்லாமல் குளிர் நீங்காது. விறைத்த அவயவங்கள் ஒன்றில் ஒன்று சார்ந்திருக்க, உடம்பை எத்தனை அடுக்கடுக்காய் வஸ்திரங்களால் போர்த்துக் கொண்டாலும், குளிர் ஒழிந்து சூடு உண்டாகுமா! அனந்தஉறுப்புச்சந்து ஒவ்வொன்றையும் பிரத்தியேக மாய்ப் போர்த்துக்கொள்ளவேண்டும்" என்று பச்சை யம்மாள் கிழவியைத்தேற்றி, மங்கத்தம்மாளும் தானும் கிழவியைநோகாமல் பிடித்துத்தூக்கி, கம்பளி உதறி விரித்து மெதுவாக வளர்த்தி, கால் இரண்டிலும் பிரத்

தியேகமாய் கம்பளிசுற்றி, கால்விரற் சந்துகளில் காற் றுப்படாமற் கம்பளித்துண்டுகளால் போர்த்துவிட்டு, மற்ருெரு கம்பளி எடுத்து, கை இரண்டையும் மார்பை யும் அவ்வாறே போர்த்து விட்டாள். பச்சையம்மாள் செய்த உபாயம் வீண்போகவில்லை. நன்ருகப்பலித்தது. குளிர் விறைப்பு நீங்கி உடம்பில் சூடு பிறந்ததுபற்றி, கிழவி இப்படியல்லவோ செய்யவேண்டும் என்று மனம் குளிரச்சொல்லிக்கொண்டு சுகமாய்ப் படுத்திருந்தாள். பின்பு பச்சையம்மாள் உடம்பிற் சூடு பிறக்கும்படி ஒற்றடம்போட வெந்நீர்ப்புட்டி ஒன்று இங்குண்டா வென்றுகேட்க, மங்கத்தம்மாள் இல்லை என்ருள். அது கேட்டு பச்சையம்மாள் "அப்படியா! ஒரு புட்டி இல்லாமல் தீராது. அதற்கு எட்டு பத்துச்செலவிட நிமித்தம் இல்லை. முக்கால்ரூபாய் கொடுத்தால் திவ் வியமான கல்புட்டி அகப்படும், உன்தாயைப்போலும் தள்ளாத பருவமுள்ளவர்கள் இருக்கும் வீட்டில் ஒற் றடம்போட ஒரு புட்டியிருப்பது பெரிய கைத்துணை யாம் குறைந்த விலைக்கும் புட்டிவாங்கலாம். காரியத் திற்கு உதவும் உரமான கல்லுபுட்டிக்கு விலை முக்கால் ரூபாய்தான். பலமான புட்டி இருந்தால் பயமில்லை. ஒற்றடம் போடும்பொழுது, புட்டி உடைந்தாவது மேல்மூடி நெகிழ்ந்து நீர் கசிந்தாவது நோயாளி உடம் பில் ஈரம் சுவறிஞல், பிராணசங்கடம் நேரிடும், புட்டி நீர்சிந்தி மெத்தையில் ஈரம் ஊறியதுபற்றி இரண்டொ ருவர் இறந்துபோ யிருக்கிருர்கள்; ஆதலால், மேல் மூடி புட்டியில் நன்ருய் அழுந்தி இருக்கவேண்டும்,

திருகுழுடி இட்டிருந்தால், திருகுமறைத் தளராமல் பொருந்தவேண்டும். எந்தவிதமாகிலும் ஒரு புட்டி வாங்கவே வேண்டும். பருவ முதிர்ந்தவர்களுக்குச் சூடுபிறப்பிக்க நான் இப்பொழுது செய்து காட்டியபடி கம்பளிப் போர்வையிடுவதும் வென்னீர்ப்புட்டியால் ஒற்றுப்பிடிப்பதும்போல, மற்றெந்த உபசாரமும் உதவாது. கட்டுப்பட்ட உதிரத்தை உடம்பெல்லாம் ஓடும்படி செலுத்த சிலர் உடம்பைப்பிடித்துத் தேய்க்கிறார்களே; அதனுல் தோல் உரிந்து காயம்பட்டு ரணமானுலுமாகிவிடும். விருத்தருக்கு வரும்காயம், ரணம் வர வர விர்த்தியாகும். அந்த ரணத்தை ஆற்றுவது வெகுகஷ்டம்" எனத்தெரியும்படியாக உரைத்தாள்.

அதுவரையிலும் அச்சத்தால் நல்ல பிள்ளைபோல வாய்விடாதிருந்த ராஜூவுக்கு அலுப்பு உண்டாக, அது சிணுங்கித்தேம்பி அழ ஆரம்பித்தது. தாயாகிய மங்கத்தம்மாள் அதை அதட்டி, "ராஜூ, நீ நல்லபிள்ளை அல்ல, அழாதேமகனே, உனக்கென்னநோய் அப்பா!" என்று போய் அவனைத்தூக்கி, மடியில் வளத்திக்கொண்டு சற்றேகுலுங்க ஆட்டினுள்.

"அம்மா மங்கத்தம்மா, மடியில்வைத்துக் குலுங்கக்குலுங்க ஆட்டுவதனுல் பிள்ளைக்குவந்த வருத்தம் திருமா, திராது. சிற்றுமணக்கெண்ணெய் ஒருசங்கு வார்த்தால், நோய்மாறும்" என்று பச்சையம்மாள் சொல்லிக்கிட்டப்போக, அக்குழந்தை திரண்டுருண்ட கருவிழிகளைத்திறந்து கடுகடுத்துக்கோபமாய் விழித்துப்பார்த்தது, பச்சையம்மாள் கையைப்பிடித்து நாடி

பார்த்தபின், நாவை நீட்டச்சொல்லிப் பார்த்தாள். பார்த்து அவள், "நான் சொன்னது தப்பல்ல மங்கத் தம்மா ஒருதரம் மலம்போக மருந்துகொடுத்தாலன்றி நோய் தீராது வயிற்றில் புளிப்புத்தட்டி யிருக்கிறது. குழந்தை தித்திப்புப்பண்டம்விற்கும் கடைக்குப்போய் மனம் தெகிட்ட தின்றிருப்பதாகத் தோன்றுகிறது என்று எனக்குத்தோன்றுகிறது" என்றாள். மங்கத் தம்மாள், "அதற்குச் சந்தேகம் இல்லை நீர்சொல்வது சரி; ஆனாலும், என்னசெய்கிறது. பிள்ளைகள் ஓயா மல் அழுதுகொண்டிருந்தால் பெற்றதாய் பின்விளையும் வினையை எண்ணாமல் அழுகை ஆற்றத் தின்பண்டம் ஏதாவது வாங்கிக்கொடுத்து வாயை மூடச்செய்கிறது. வழக்கந்தானே" என்று தன் குற்றத்திற்குச் சமாதா னம் சொன்னாள். அது கேட்டு பச்சையம்மாள், "பிள்ளைகளுக்குத்தித்திப்புப்பண்டம்வாங்கிக்கொடுத்து வியாதி வருவித்துக் கொள்வதை விட அழுகையை நிறுத்த உபாயம் மற்றேதும் இல்லையா? தித்திப்புப் பண்டம் அன்றன்று வாங்கிக்கொடுக்கச் செல்லும்துட் டைச்சேர்த்து வைத்தால், ஒரு வாரத்தில் சேரும் தொகையைப் பயன்படச் செலவிடத்தக்க உத்தமமான வகை எத்தனையோ உண்டு? அது நிற்க, அவர்கள் வேடிக்கையாய்ப் பொழுதுகழிக்க விசித்திரமான விளையாட்டுக்கருவிகள் வேண்டுமேட்டும் வாங்கிக்கொடுக் கலாமே" என்று சொல்ல, மங்கத்தம்மாள், "நீர் சொல் வது நல்ல யுக்திதான். ஆனாலும் தித்திப்புகளுக்குச் செலவிடும் துட்டைச் சேர்த்துவைத்து, வாரமுடிவில்

தேறும் அற்பதொகைக்கு என்னத்தை வாங்கக்கூடும் அம்மா!" என்று உத்தரம் சொன்னாள். அதற்குப் பச்சையம்மாள் "கணக்குப்பார்த்தால், எல்லாம் தெரியும். சராசரி வாரம் ஒன்றுக்கு உன் பிள்ளைகளுக்குத் தலைக்கு எத்தனை அணா நீ கொடுத்துவருகிறாய்?" என்று கேட்டாள்.

அப்பொழுது மங்கத்தம்மாள் "உமது வாக்கினின்று பிறக்கும் கேள்விகள் ஒன்றுக்கொன்று அதிசயமாயிருக்கின்றனவே! அன்றுகொடுக்கும்துட்டு கணக்கு அன்றேமறந்துபோகும்; எனக்குச் சராசரி கணக்கு நிதானம் எவ்வாறு தெரியும்?" எனப் பச்சையம்மாளைத் திரும்பக்கேட்டாள்.

பச்சையம்மாள் "நீ நினைத்துப்பார், மங்கத்தம்மா! இந்தவாரம் கொடுத்ததொகை என்ன? அது உனக்கு மறதியாய்ப்போனாலும், பிள்ளைகளுக்கு ஞாபகமிருக்குமென்று எண்ணுகிறேன்" என்று உரைத்தாள். இப்படிப் பச்சையம்மாள் சொல்லவும், மூத்தகுமாரத்தியாகியஅன்னம் என்பவள் முன்னே ஓடிவந்து "திங்கட்கிழமை சின்னம்மா தந்தது நாலுதுட்டு; செவ்வாய்க்கிழமை அம்மா கொடுத்தது இரண்டுதுட்டு; புதன் கிழமை எனக்குத் துட்டு யாரும் தரவில்லை; நேற்று வியாழக்கிழமை ஒரு அணாவும் இரண்டு துட்டுக்கிடைத்தது; இன்றைக்கு இரண்டு துட்டு வாங்கிக்கொண்டேன்" என்று பச்சையம்மாள் கேட்ட கேள்விக்கு உத்தரம் சொன்னாள். அது கேட்டுப் பச்சையம்மாள் சந்தோஷப்பட்டு, "நீ வாங்கின துட்டுக் கணக்கை

மறவாமல் சரியாய் நினைத்துச்சொல்லுகிறாய். நீ ஒருவருக்கு வாழ்கைப்படும் பொழுது, குடித்தனப்பாங்கு உனக்கு நன்றாய் அமையும், அமையும். நல்லது, இவ்வாரம் உனக்குத் தின்னும்பண்டத்தில் செலவழிந்த பணம் இரண்டணா, நாலு துட்டல்லவா?" என, அன்னம் என்கிற பெண் மனமகிழ்ந்து முகம்மலர்ந்து நின்றாள். "அப்புறம் உன்னுடன் பிறந்த குழந்தைகள் எத்தனை பேர் அம்மா?" என்று பச்சையம்மாள் கேட்க, அன்னம் "நாலுபேர், என்னுடன் ஐந்துபேர்" என்றாள். அப்பொழுது பச்சையம்மாள் "சந்தோஷம், நாலு அஞ்சு எத்தனை? இதற்கு உத்தரம்சொல், பார்ப்போம்" எனவும், அன்னம் இந்தக் கேழ்விக்கு மறுமொழி யாருக்குத்தான் தெரியாது என நினைத்து "இருபது" என்றாள். பின்பு பச்சையம்மாள் "நாலிருபது துட்டு எத்தனை அணா?" எனத் திருப்பிக்கேட்ட கேழ்விக்கு அன்னம் சொன்ன மறுமொழி தப்பாயிருந்தது. அதன் தம்பி அருணகிரி தலை நிமிர்ந்து புருவம் நெறித்து நினைத்துப்பார்த்து, "பதின்மூன்று அணா இரண்டுதுட்டு. நான் அன்றைக்கு என் வகுப்பில் இந்த கேள்விக்கு உத்தரம்சொல்லி ஒருவனுக்கு முன்னேபோய் உட்காந்தேன்" என்று தைரியமாய்ச்சொன்னான். பின்பு பச்சையம்மாள் "நீ மெத்த கெட்டிக்காரன்தான்! பதின்மூன்று அணா இரண்டுதுட்டை, ஐம்பத்திரண்டாற் பெருக்கி வரும் தொகை என்ன?" என்று அவனையேகேட்க, அருணகிரி சொல்லத் தெரியாமல் தலை இறங்கிக்கொண்டான். தான் முந்தின

பிள்ளை இந்தக் கேள்விக்குச்சரியான உத்தரம் சொல்லித் தனக்கு முன்னே போவானென்று எண்ணினது போல முழித்துப்பார்த்தான். "இதற்கு உத்தரம் எனக்குத்தெரியவில்லை; அது கையிலடங்காது; பை நிறைய யிருக்கலாம்" என்றான். அப்பால் பச்சையம்மாள் "பெருந்தொகையென்று நீ சொன்னது மெய்தான். அது நாற்பத்து மூன்று ரூபாய், ஐந்து அணு, நாலு பை" அவ்வளவு பணமாகின்றது எனச்சொல்லவும், பிள்ளைகள் "அடே அப்பா!" என்று ஆச்சரியப்பட்டார்கள். தின்பண்டங்களில் செலவாகும் பணம் இவ்வாறு அளவுகடந் திருப்பதைச் சொல்லக் கேட்டபொழுது, ஓயாது அழுதகண்ணுமாயிருந்த ராஜூம் ஆச்சரியத்தால் அழுகிறதைவிட்டு "தனக்குக் கிடைக்கும் துட்டுகளை நினைத்துச் சிரித்துக்கொண்டிருந்தது. மிட்டாய்க்கடையில் பாழாக்குகிற இந்தப் பணத்தை மற்றேதாயினும் ஒரு வழியில் செலவிட்டுப் பிரயோஜனப்படும்படி செய்யலாகாதா" எனப் பச்சையம்மாள் வினவினுள். இரண்டொரு நிமிஷம் பிள்ளைகள் ஒன்றும் பேசாமல் வாய்திறவா திருந்தார்கள். அப்பால் அன்னம் "பிரயோஜனமாகப் பணத்தைச் செலவிடும் உபாயம் உண்டு. காமாக்ஷியுடைய பட்டுச்சிற்றாடைபோல் ஒன்று வாங்கலாம். அது எனக்கு ஆசையாயிருக்கிறது" என அவசரமாய்ச்சொல்ல, தணிகாசலம் வைத்திருப்பதுபோல் அழகிய தச்சுவேலைக்காகும் ஆயுதப்பெட்டி ஒன்று தனக்கு வேண்டுமென்று அருணகிரியும், தலையாட்டும் பொம்மை ஒன்று வாங்குவது

தனக்கிஷ்டமென்று இளையசொர்னமும் சந்தோஷமாய்ச் சொன்னார்கள். தாய்மடியில் இருந்த ராஜு "பந்து ஒன்று வாங்கினால் உருட்டிவிளையாடுவேன். அதுவும் பெரிதல்ல, மிட்டாய்க்கடையில் கைநிறையும்படியான பெரிய லட்டு இருந்தது கண்டு ஆசைப்பட்டேனே அது ஒன்று வாங்கித்தின்றால், வாயில் தேன் ஒழுகும்" என்று சொல்லி குதித்துக் கூத்தாடினான். "ராஜு, வயிற்றுவலிக்குச் சிற்றாமணக்கெண்ணெய் குடிக்கமாட்டோமென்று அழுகிற நீ ஆசைதீர பெரியலட்டு வாங்கித்தின்றால், அப்புறம் ஒருபங்குக்கு இருபங்கு எண்ணெய் குடிக்கவேண்டுமே. அதற்கு என்னசெய்வாய்? மிட்டாய் முதலிய சிறு திண்டிகள் வாங்கித்தின்று வியாதி உபத்திரவப்படுவதிலும், பந்து வாங்கி உருட்டி விளையாடித் திரிவது நல்லதல்லவா. பிள்ளைகளே, கையில்கிடைத்த பணத்தை வீண்செலவு செய்யாமல் சேர்த்து வைப்பீர்களானால், உங்கள் உங்கள் மனம் போல் அன்னம் பட்டுச்சிற்றாடையும், அருணகிரி தச்சன் ஆயுதப்பெட்டியும், சொர்னம் பொம்மையும் வாங்கமாட்டுவீர்களே. அப்புறம் இதுகளையெல்லாம் வாங்கித்தரப் பணம் ஏதென்று உங்கள் தாயார் சொல்ல நிமித்தம் இராது. கொடுத்தபணம் பாழிற் செலவாகாமல் பலவகைப்பொருள் அடுத்தடுத்து வரப் பெறுவதனால், இத்தனைபொருளும் உங்கள் தாய்க்கு எத்தனை வெகுமானமாயிருக்கும்" எனச் சிறுவர் சிறுமியர் தங்கட்கு அகப்படும் பணத்தைச் செலவிடத்தகும் வழிகளைப் பச்சையம்மாள் குறிப்பித்தாள். அப்பால்,

மங்கத்தம்மாளுக்கும் பச்சையம்மாளுக்கும் பின்வருமாறு சம்பாஷணை நடந்தது:—

**மங்கத்தம்மாள்.**—மெய்தானம்மா! மெய்தானம்மா! நான் இதுகளை எல்லாம் ஒருநாளும் நினைத்ததேயில்லை. பச்சையம்மா, நீர்சொன்ன கணக்குச் சரியாயிருக்குமா? அது மெத்தபணமா யிருக்கிறதே.

**பச்சையம்மாள்.**—கணக்கிலே பிசகு யாதொன்றுமில்லை. பதின்மூன்று அணு இரண்டு துட்டை ஐம்பத்திரண்டாற் பெருக்க வரும் தொகை நாற்பத்து மூன்று ரூபாய், ஐந்து அணு நாலுபை அவ்வளவு ஆகின்றது. இந்த கணக்குச் சரிதான். ஆனால் ஒருவருஷகாலத்தில் உன் பிள்ளைகளுக்குத் தித்திப்புப் பண்டத்திற்காக செலவாகும் பணம் இவ்வளவோ அவ்வளவோ எனக்குத் தெரியாது. நாலு இரண்டு ஏறினாலும் ஏறும், குறைந்தாலும் குறையும். ஒன்றைப்பற்றி மாத்திரம் உறுதியாய்ச் சொல்லமாட்டுவேன். சிறு திண்டியில் பாழுக்கிறைக்கும் பணத்தைப் பத்திரமாய் வைத்திருந்தால், அது உன் பிள்ளைகளுக்குச் சிறக்க உடுக்கவேண்டும் துணி மணி செலவிற்கு உதவும், அல்லது அவர்களுக்கு இன்பமும் பிரயோஜனகாமுமான விளையாட்டுக் கருவிகள் வாங்கிக்கொடுக்க உதவும். தாயானவள் அவர்களை ஓரிடத்தில் விட்டு, அவரவர் விளையாட்டுக்கருவிகளையும் கொடுத்து, தன்வேலைக்குப் போய்விட்டால், பிள்ளைகள் நெடுநேரம் விளையாட்டில் பராக்காய் இருப்பார்கள். தாய் வேலைக்கு அவர்களாற் சற்றேனும் அப்பியந்தரம் உண்டாகாது. அழுகிற பிள்ளையைப்பார்த்துத் தாய்,

"இந்தா அரை அணா, இனிவாயைமூடு, வாயைமூடு இதைக் கொண்டுபோய்த் தெருவில் எள்ளுண்டை வாங்கிக் கொண்டுவந்து சாப்பிடு" என்று சொல்வது எளிது. அரை அணா கொடுத்துவிடுவது பெரு நஷ்டமென்று தாய்க்கு அவ்வேளையில் தோற்றமாட்டாது. தினம் ஒன்றுக்கு அரை அணா விகிதம் ஒருவாரத்திற்கு மூன்றரை அணாவும், மாசத்திற்கு முக்காலே அரைக் கால் ரூபாயும், வருஷத்திற்குப் பத்தரை ரூபாயும் தொகையேறுவது அச்சமயத்தில் தாய் நினைவில் வருமா? வராது.

**மங்கத்தம்மாள்.**—கல்வியறிவில்லாத பெண்பாலர் கண்ணில்லாத அந்தகருக்குச் சமானர். மாதாபிதா என்னை இளமையிற் படிப்பிக்கவில்லையே? பள்ளிக்கு வைத்திலரே பிதாவாகிய பாதகரே என்னும் பழமொழியைப் போல இன்று பருவம் முதிர்ந்தபின்இதை நினைத்துப் பரிதபித்துப் பயன் என்ன!

**பச்சையம்மாள்.**—நான் சொன்ன கணக்கு நிதானம் அறியக் கல்வித்திறம் வேண்டுவதே இல்லை. இயற்கை அறிவைச் செலுத்திப் பார்த்தால், அது பரிஷ்கார மாய்த் தோன்றும். இயற்கை அறிவு உனக்கு விசேஷம் உண்டு. இல்லாவிடில், வீட்டை இப்படிச் சுத்தி செய்து சிங்காரித்து வைக்க உனக்கெப்படி தெரியும்! இந்தக் காரியத்தைச் சிந்தையில் அழுந்த உனக்கொருதரம் குறிப்பித்தாலே போதும். அப்புறம் என்னாளும் அக்குறிப்பை மாறுவிதியாகக் கருத்தில் வைத்துக்கொள்வாய். இதற்குச் சந்தேகமில்லை.

(சமயோசிதமாகப் பச்சையம்மாள் வாக்கினின்று பிறந்த சொன்னயம் அறிந்து.)

**மங்கத்தம்மாள்.**—இனி நாங்கள் இதை ஞாபகத்தில் வைத்து நடப்போம். அது நிஜம், கைக்கெட்டும் பணத்தை செலவிடாமல் சேர்த்துவைக்கப் பிள்ளைகளுக்கு இஷ்டமானுல் எனக்குப் பின்னும் சந்தோஷந் தான். அது இருக்கட்டும் அம்மா! வயிற்றுவலியுடனிருக்கும் ராஜுக்கு என்ன செய்யச் சொல்லுகிறீர். சிற்றுமணக்கெண்ணெய் கொடுக்கத்தான் வேண்டுமா?

**பச்சையம்மாள்.**—ஆமாம் அவசியம் கொடுக்கவேண்டும். நேற்றிராத்திரி எண்ணெய் கொடுத்திருந்தால், இன்றைக்கு எவ்வளவும் சௌக்கியத் தாழ்வின்றி வேடிக்கையாய் ஓடியாடித் திரிவானே.

**மங்கத்தம்மாள்.**—ஆமம்மா, நானும் அப்படித்தான் நினைத்தேன். நினைத்ததும் எண்ணெய் கொடுக்கத் தெரியாமல் விட்டுவிட்டேன். அற்ப நோய்க்கெல்லாம் வைத்தியனை அழைத்து வழக்கப்படுத்தினுல் செலவு அதிகப்படுமே.

**பச்சையம்மாள்.**—இவ்வித அற்ப நோய்களுக்கெல்லாம் வைத்திய ரிடத்திற்குப் போகவேண்டியதில்லை. கோழியை அடிக்கக் குறுந்தடி வேண்டுமோ? கையில் வெண்ணெயிருக்க நெய் தேடுவானேன் பெரும்பாலும் எளிய கைமருந்து எத்தனையோ பிள்ளைகள்வியாதியைத்தீர்க்கும். வேறு வருத்தம் விளைவிக்காது. இவ்வகை மருந்துகளைச் சேகரித்துக் கைத்துணையாக

வைத்திருப்பது யாவருக்கும் தகும். நோய் வந்தபிறகு தேடித்திரிந்து கடைமருந்து வாங்கப்போனால், கடைக்காரன் கேட்கும் விலை கட்டாயமாய்க் கொடுக்கவேண்டும். கொடாமல் தீராதே. இப்படி வேண்டும் சமயந்தோறும் கொடுத்துவந்தால், பலதுளி பெருவெள்ளமானாற்போல் நாளாவட்டத்தில் தொகை ஏறிவிடும். மருந்துவகை மெத்த வாங்கி வைத்தாலோ, செலவு மிதமாகும். பருவத்தின் தாரதம்மியம் கண்டு பிள்ளைகளுக்கு எண்ணெய் உச்சிக் கரண்டி இரண்டு மூன்று நாலுவரையில் அச்சமில்லாமல் கொடுக்கலாம். சிற்றாமணக்கெண்ணெய் விலை வீசை ஒன்றுக்கு ரூபாய் ஒன்று, விரோசனத்திற்கு மற்றொருவித அருமருந்துண்டு:—அதாவது, ரூபெர்ப்பு என்று ஒரு வகைச் சீனக்கிழங்கு மூன்று நாலு குன்றிமணி எடை, உழமண்ணுப்பு அவ்வளவு எடை சுக்காவது, மிளகுத்திராவகம் ஆவது சிறிது இம்மூன்றும் கலந்து செய்யப்படுவதுதான். இம்மருந்து செய்து புட்டியில் விட்டு வைத்திருந்தால், வேண்டும்பொழுது சிறிது கொடுக்கலாம். மருந்துச் செலவு அதிகமாகாது. ராஜுக்கு வந்திருக்கின்ற வயிற்றுவலி முதலிய நோய்களுக்கு இது கைகண்ட மருந்து. இம்மருந்து கொடுத்தும் குணமில்லாவிட்டால், வைத்தியனை வரவழைத்துக் காட்டவேண்டும். மருந்து கொடுக்கும் அவ்வளவு திட்டத்தைச் சுளுவாய் இனி சொல்லுவேன். எவ்வகை மருந்தேனும் வாங்கப் போகும்பொழுது, அம்மருந்து பெரியவர்களுக்கு எம்மாத்திரம் கொடுக்கவேண்டுமென்று

கடைக்காரனைக் கேட்டறிந்து, மூன்று வயசுக்கு உட்பட்ட பிள்ளைகளுக்கு அரைக்காற்பங்கு, மூன்று முதல் ஏழுவயசு வரையில் உள்ள பிள்ளைகளுக்குக் காற்பங்கு, ஏழுமுதல் பதினறு பருவமாகிறவரையில் அரைப்பங்கு; பதினறு பருவம் கடந்தவர்களுக்கு மூன்றில் இரண்டுபங்கு கொடுக்கவேண்டும்.

**மங்கத்தம்மாள்.**—இந்த அளவு திட்டங்கள் தவருமல் ஞாபகத்தில் வைத்திருக்க என்னல் ஆகாது. ஞாபகப் பிசகாய் ஏதாயினும் விபரீதத்தில் வந்து நேரிடும், இது நிஜம் அம்மா!

**பச்சையம்மாள்.**—அப்படியானல் மருந்துப்பட்டோலை போட்டுத்தருவேன். நான் இப்பொழுது உனக்கு விவரமாகச் சொன்ன மருந்துப் பிரமாணமுதலிய நுட்பங்களை வீடுகள்தோறும் தாய்மார்கள் வேண்டும்பொழுது எளிதில் பார்த்து அறியும்பொருட்டுத் துண்டுக்கடிதங்களில் அச்சிடுவித்துக் கொடுப்பது உத்தமமென்று பலமுறை நான் எண்ணினது உண்டு. ஒரு உச்சிக்கரண்டி கொள்ளும் எண்ணெய் ஒரு ட்ராம்; ஒரு ஆலக்கரண்டி கொள்வது அரை ஔன்ஸ். இவை போலும் அளவு திட்டம் வெகுபேருக்குத் தெரியாது. இது அறிந்து பாராமல் அறியாமையால் நேரிடத்தக்க பிரமாதங்கள் நான் எத்தனையென்று சொல்வேன். இவ்விதத் தீமைகளை நிவர்த்திசெய்யும் உபாயத்தைப் பற்றி, நான் ஒரு பெருமாட்டியைக்கண்டு பேசவேண்டும்.

**மங்கத்தம்மாள்.**—நீர் சொன்னதில் கிஞ்சித்தும் பிசகு இல்லை. மருந்துப் பிரமாண விவரப்பட்டி என்று அச்சிட்டுப் பிரசுரஞ் செய்யப்படுமானால், அதற்கு நிகர் எதுவும் இல்லை. அதனால் என்போலும் அறிவில்லாதவருக்கு அப்போதப்போது எவ்வளவோ உபயோகமா யிருக்குமே.

**பச்சையம்மாள்.**—இந்த உபாயத்தை நிறைவேற்றுவிக்க வகைபார்ப்பேன். எனக்குத் தேசோபகார முயற்சிகளில் எப்பொழுதும் சிந்தை உண்டு. நான் கேட்டால் ஐம்பது அறுபது பிரதிகள் அந்தப் பெருமாட்டி அச்சிடுவித்துக் கொடுப்பாள். அவை என் கைக்கு எட்டும்பொழுது, அவசியம் உனக்கு ஒரு பிரதி கொடுப்பேன்.

**மங்கத்தம்மாள்.**—அம்மா நீங்கள் தயவுசெய்து கொடுப்பீரானால், அந்நன்றியை ஒருபொழுதும் மறவேன், பச்சையம்மா. எனக்கு அறிமுகமானவர்கள் இரண்டொருவர் அந்த அச்சுபோட்ட பட்டியைக்கண்டால் விடார்கள். தலைக்கொன்று தமக்கும் வேண்டுமென்று கேட்பார்கள். வர வரப் பேச்சை வளர்த்தி உமக்குச் சிரமம் கொடுக்க அஞ்சுகிறேன். அறிந்தறியாமற் செய்தபிழையை மன்னிக்கவேண்டும். இன்னும் ஒரு சங்கதி கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

ரணத்தைஆற்ற ஊமத்தம் இலைவைத்துக்கட்டுவதைப்பற்றி அன்றொருநாள் எனக்குச் சொன்னீரே அது மறந்து போனேன். இவ்வீதியில் இருபது வீட்டுக்கு அப்புறம் இருக்கும் துளசியம்மாளுடைய குழந்தை

காலில் ரணம் உண்டாய் மிகு உபத்திரவப் படுகின் றது. ஊமத்தம் இலைவைத்துக்கட்டு முறையைத் தயை கூர்ந்து இன்னும் ஒரு முறை சொல்லுங்களம்மா.

**பச்சையம்மாள்.**—அது கட்டுவது கஷ்டமல்லவே, மங்கத்தம்மா குழந்தைகளும் அதை எளிதில் அறிய லாம். ரணத்தை ஆற்ற ஊமத்தம் இலை ஒன்றுமாத்திர மல்ல, கரணைப்பாவட்டை, ரணக்கள்ளி, ஆடுதின்னுப் பாலை முதலிய இலைவகைகள் பலவும் உதவும், ஆடுதின் னுப்பாலைக்கு ரணம்போக்கியென்றும், புழுக்கொல்லி யென்றும் வெவ்வேறு பெயர் வழங்கும். இந்த இலை களில் எதாகிலும் ஒன்றை நெருப்பில் வதக்கி, விளக் கெண்ணெய் தடவி ரணத்தின்மேல் வைத்து, மெல்லி ழைத் துணித்துண்டை இரண்டாக மூன்றாக மடித்து, அதன்மேல் வைத்துக் கட்டவும். கட்டி, மூன்று மணி நேரம் சென்றபின், அதை அவிழ்த்து எறிந்துபோட்டு, மறுகட்டுக்கட்டவும். இப்படி நாலைந்து கட்டில் விஷநீர் முழுதும் வெளிப்பட, ரணம் ஆறிப்போகும்..

**மங்கத்தம்மாள்.**—நீர் போகும் மார்க்கத்தில் துளசி யம்மாளைக் கண்டு, இதைச் சொல்லிப்போகக் கூடுமா னால் நல்லது. நீர் சொன்னதெல்லால் பிசகாமல் திருப் பிச் சொல்லும் வாக்குத்திறம் எனக்கில்லை. துளசியம் மாள் குழந்தைக்கு ரண உபத்திரவம் மிகுதியாதலால், அந்த அம்மாள் உங்கள் நன்றியை ஒரு நாளும் மறவார்,

**பச்சையம்மாள்.**—துளசியம்மாள் வீடு எது?

**மங்கத்தம்மாள்.**—இவ்வீதியில் இருபதாவது கதவிலக் கமுள்ள வீடு. வாசலில் மகிழமரம் ஒன்று நிற்கின்றது.

**பச்சையம்மாள்.**—அப்படியா? நான் கண்டு வார்த்தை சொல்லிப் போகிறேன். இந்த வீதியிற்றானே பதினெட்டாவது கதலக்கமுள்ள வீட்டுக்கும் நான் போகவேண்டியிருக்கின்றது என்று சொல்லிவிட்டுப் படுக்கையாய்ப் படுத்திருக்கும் பாட்டி கிட்டப்போய் நான் போய்வருகிறேன் பாட்டி, முன் இருந்த குளிர் உபத்திரவம் இப்பொழுது தீர்ந்ததா?

**கிழவி.**—நீ மஹாராஜியாயிரு, அம்மா குளிர், விறைப்பு கொஞ்சமேனுமில்லை. இப்பொழுது எனக்குள்ள உடம்பின் சுகத்தை என்னென்று சொல்வேன்.

**பச்சையம்மாள்.**—மெத்த சந்தோஷம், போய்வருகிறேன், மங்கத்தம்மா; ராஜுக்குச் சிற்றாமணக்கெண்ணெய் கொடுக்கமறந்து போகாதே. கேள், நான் சொல்லும் முறைதவறாமற் கொடுப்பாயானால், நாவில் ருசிதட்ட, ராஜு பின்னும் வேண்டுமென்று வலியக் கேட்டாலும் கேட்பான். (பச்சையம்மாள் இப்படிச் சொல்லக் கேட்டிருந்த ராஜு, ருசிகண்டு பின்னும் எண்ணெய் வலியக்கேட்கவும் வாய் எழுமாவென்று பிரமித்தான். வாய் திறந்தொன்றும் சொல்லவில்லை.) ஆழாக்குப் பாலில் சர்க்கரையும், வால்மிளகு, ஏலம், லவங்கம், ஜாதிபத்திரியும் போட்டு, இவை நன்றாய் ஊறும்படி செய்து அடுப்பில் அரைமணிநேரம் பாலை இளங்கொதி கொதிக்கவைத்து, அதன்மேல், சுத்தமான புட்டியில் மேற்குறித்த அளவு சிற்றாமணக்கெண்ணெயும் சிறிது பாலும் விட்டுப் புட்டிமின்வாயை மூடியால், எல்லாம் நுரைக்கிறவரையில் நன்றாய்க்குலிக்கி, பின்பு அதைப்

பாலில் ஊற்றி, ராஜுக்குக் குடிக்கக்கொடு. "தேனைத் தொட்டவர் கையை நக்காரோ" என்றதுபோல, ராஜுக்குப் பின்னும் ஒரு கிண்ணம் இம்மருந்து குடிக்கலாமென்று எண்ணம் உண்டாகும். இம்மருந்து குடித்த சிறுவர் சிறுமியர் வெகுபேர் ஒரு நாழிகைக்குள்ளே பின்னும் வேண்டுமென்று ஆசையாய்க் கேட்பதுண்டு. நல்லது, பொழுது போகின்றது, சுகமாய் இருங்கள். இன்னும் இரண்டொரு தினத்தில் இவ்வழி வரும் பொழுது எட்டிப்பார்த்துப் போவேன்.

மங்கத்தம்மாள் சொன்ன, மகிழமரக்குறிப்புப் பிடித்துப் பச்சையம்மாள் துளசியம்மாள் வீட்டுக்குப் போய்க் குழந்தையைப் பார்த்தாள். மங்கத்தம்மாள் சொன்னது கட்டுக்கதையல்ல, வாஸ்தவமாகவே இருந்தது. குழந்தைக்குக் கால் ரணம் கேவலம் ஊமத்தம் இலை முதலிய கைமருந்துகளில் தீரும் பருவம்கடந்து, வெந்து அளிந்து பார்க்கப் பரிதாபமாயிருந்தது. முதலில் பச்சையம்மாள் ரணத்தில் நோகாமல் காலை மிருது வாய்க்கழுவிச் சுத்திசெய்து, ஒற்றுடையால் ஈரம்போக்கி, கோதுமை ரொட்டி போல்டிஸ் செய்துவைத்துக் கட்டியபின், வீட்டுக்குப்போகும் மார்க்கத்தில் வைத்தியசாலை ரணவைத்தியர் ஒருவனைக்கண்டு, இந்தக்குழந்தைகாலை வந்து பார்க்கும்படி செய்வதாகத் தைரியம் சொல்லித்திரும்பினாள். அப்பொழுது அவ்வீட்டில் மற்றொரு அறையில் வைக்கோலணை மெத்தையில் பத்தொன்பது வயசுப்பெண்ணொருத்தி படுத்திருந்து தவித்து அம்மா, அப்பா என்னும் சத்தம் பச்சையம்மாள்

செவிக்கு எட்டிற்று. அதன்மேல் பச்சையம்மாளுக்கும் துளசியம்மாளுக்கும் அடியில் வருமாறு சம்பாஷணை நடந்தது.

**பச்சையம்மாள்.**—வைத்தியருக்கு இவ்வீட்டில் நோயாளிகள் இரண்டு பெயர் இருக்கிறார்கள்போல் காணப்படுகிறதே. உன்மகளுக்கு அசௌக்கியம் என்ன?

**துளசியம்மாள்.**—அம்மா அவள் என்மகளல்ல, அக்காமகள் அவள்பேர் சிவகாமி; நேற்றுமழையில் நனைந்து ஜலதோஷம்கண்டு வருந்துகிறாள், மார்அடைத்து, மூச்சுவிடவும் வாங்கவுங் கூடாமற் பிராணசங்கடப்படுகிறாள் என்றாள். (அதைக்கேட்டுப் பச்சையம்மாள் கிட்டப் போய்ப் பெண்ணின் கையைப் பிடித்துப்பார்த்தாள் சுரம் நெருப்புப் பறக்கக்காய்ந்தது.)

**பச்சையம்மாள்.**—இது அற்ப பிணியல்ல; ஆலசியம் செய்யக்கூடாது. சீக்கிரமாய் வைத்தியரை அழைத்துக் காண்பிக்கவேண்டும். நல்லது பண்டித சிரேஷ்டராகிய சந்திரசேகர முதலியாரைக் கண்டுபேசி, இன்று சாயரக்ஷைக்குள் வந்து பார்க்கச்சொல்வேன். அவர் எவர்களுக்கும் நல்லவர்; பூததயையுள்ளவர்; நோயாளிகளை நல்வார்த்தைச் சொல்லித் தேற்றி, பிணியைப் பற்றறத்தீர்க்கவல்ல விவேகி; அனுபவம் முதிர்ந்தவர்; அவர் வருவதற்குமுன் செய்யத்தகும் உபசாந்தி ஒன்று சொல்லுகிறேன். நீராவி வேதுபிடித்தால் தொண்டையில் இருக்கிற வருத்தம் சிறிது தீரும், அப்போது.

(நோயாளிக்குத் தாஷ்டீகமாய்ப்பேச வசம் இல்லாதிருந்தும், உபத்திரவம் சிறிது லகுவாகுமென்ற சொல்

அவள் செவியில் விழுந்ததனல் பின்வரும் கேழ்வி கேட்டாள்.)

**சிவகாமி.**—நீராவி வேதுபிடிக்கு முறை தெரியாதே. அதற்கு என்னசெய்வேன்? என்றாள்.

**பச்சையம்மாள்.**—அம்முறை எளிதில் அறியலாம். சொல்லக்கேள். நெருப்புப்போல் ஆவிபறக்க அடுப்பில் வெந்நீர்காயவைத்து, கழுத்து சிறுத்த பாத்திரம் ஒன்றில் விட்டு, சுகமாய் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு பாத்திரத்தை முன்னுக்குவைத்து, கம்பளி அல்லது சால்வையாலாவது குளிருக்குப் போர்த்துக் கொள்ளும் இழை நெருங்கிய வஸ்திரம் மற்றேதாயினும் இருந்தால் அதனலாவது காற்றுப்புகாமலிருக்கும்படி பாத்திரத்தை உள்ளடக்கி முக்காடிட்டு, வஸ்திரத்தின் ஓரம் நான்கு பக்கமும் தரையில் மடிந்து படிந்திருக்க விட்டு, பாத்திரத்தின் வாயினின்று பறக்கும் ஆவி முகத்திற்பட்டு சுவாசத்துடன் உட்செல்லும்படி குனிந்திரு. கழுத்து விரிந்தபாத்திரம் இதற்கு உதவாது. வெந்நீர் விரைவில் ஆறிப்போம். வெளியில் வீசுங் காற்று ஓ ரணுவும் உட்செல்லலாகாது. சென்றாற் கெடுதி விளையும். சூடாறி வெந்நீர் குளிரவும், அடுப்பிற் கொதிக்கும் வெந்நீர் மற்றொரு பாத்திரத்தில் விட்டு, இதைவிலக்கி, அதைத் திரைக்குள் வைத்து வேது பிடிக்கவும். இப்படிச்செய்யக் கை சுறு சுறுப்பாக இருக்கவேண்டும். ஒரு பாத்திரத்தை விலக்கி மறு பாத்திரத்தை வைப்பது மேகம்மின்னிமறைவதுபோல் அத்தனை தீவரமாயிருக்கவேண்டும். தாங்கக் கூடுமா

ஞல் அரைமணிநேரம் வேதுபிடிப்பது நலம். ஆவி யைப்பொறுக்கச் சக்தியில்லாமல் போனால் சற்று முன் னமே நிறுத்திவிடலாம். பாத்திரத்தை விலக்கும் பொழுது, சடுதியில் முக்காடு எடுக்க ஒண்ணாது. எடு த்தால், நீராவியால், உடம்புமுழுதும் வெயர்த்து நோயா ளிக்கு உடனே குளிர்காற்றுப்பட்டு, வெயர்வு அட ங்கினல் செய்த சிகிச்சை வீணாகிவிடும். முக்காடிட்ட படி படுத்திருந்து இளைப்பாறி, அப்புறம் சிறிது சிறிதாக அதை விலக்கவும். இவ்வாறு வேதுபிடித்துச் சுகம் கண்டால், நாள் ஒன்றுக்கு மூன்று நாலுமுறை பிடிக்கலாம். இது சமயம் அறிந்து செய்யவேண்டும். வேதுவிட்டவுடன் தெருவாசலில்போய், வீசும்காற்று முகத்தில் நிற்கப்படாதென்று சொல்லவும் வேண்டுமோ? புத்தி பூர்வகமாய்ச்செய்தால் தொண்டைநோய், மார் நோய், சுவாசாசய முதலிய உறுப்பு வேக்காடு இவை களுக்கு வேது பிடிப்பதிலும் மேலான மருந்து எனக் குத் தெரியாது. அன்றியும் இந்தப் பரிகாரம் எவரும் எளிதிற் செய்யத்தக்கது. இதற்குச் சமானம் இல்லை. வெந்நீருக்கு வழியில்லாதவர்களும் உண்டா? தண்ணீர் அருமை மனுஷருக்குத் தெரியாது. ஒரு முறை தெரிந்தால், கடவுள் யாவருக்கும் தயைபுரிந்தருளிய இந்த பெரிய வரத்தை அவர்கள் அவமதிப்பு செய்யார் களே! இப்போது அடுப்பில் ஒரு பாண்டத்தில் ஜலம் வைத்திருக்கிற தல்லவா? விரைவில் காய்ந்தால், உமது அக்கா மகளுக்கு வேது பிடிக்கு முறை செய்யக் காண் பித்துப் போவேன்.

**துளசியம்மாள்.**—அதுதான் மிக்க உபகாரம், இதோ நொடிப்பொழுதில் வெந்நீர் வைத்துக் கொடுக்கிறேன். வேதுபிடிக்கும் முறையைத் தயவாய்ச் செய்து காண்பித்துப்போகவேண்டும் அம்மா. (வெந்நீர் சுண்டக் காய்ந்தபின் பச்சையம்மாள் சிறு பாத்திரத்தில் கொஞ்சம் விட்டு, சிவகாமியைக் கட்டிலில் உட்காரவைத்து, இடுப்பிற் கும்பலாகத் தலையணை இட்டு, வெந்நீர் பாத்திரத்தைக் கிட்டவைத்து, கம்பளிச் சால்வையால் காற்றுப் புகாதபடி அவளுக்குத் திரைபோட்டு, பத்து நிமிஷமளவு வேது பிடிக்கப் பண்ணினாள். பின்பு திரையை விலக்கிப் பார்த்தபொழுது, அந்த சிவகாமிக்கு முன்னுள்ள வியாதி பாதி லகுவாய்ப் போய் விட்டது.

**துளசியம்மாள்.**—இந்த அதிசயம் நான் இதற்குமுன் எப்பொழுதும் கண்டதில்லை. பெண்பட்டபாடு பார்த்திருந்த எனக்கல்லவோ தெரியும்! வெந்நீருக்கு இத்தனை அற்புத சக்தி உண்டென்று நான் இதுவரையில் அறியவேயில்லை.

**பச்சையம்மாள்.**—“சுண்ணாம்பில் இருக்கிறது சூக்ஷ்மம்” என்பதுபோல, வியாதிகள் பல எளிய மருந்தால் தீரும். ஆகவே அவ்வியாதிகளுக்கு எளிய மருந்தே பரமௌஷதமெனத்தகும். சிவகாமிக்கு வந்திருக்கிற ஜலதோஷம் சற்றுக் கடுமையானது. சாதாரணமாய் நால்வருக்கும் வருவதுபோல, அல்ல எனக்கு ஜலுப்பு கண்டு தலைநோய் உண்டானால், நான் குளிர்ந்தஊற்றுநீர் ஒரு சொம்புமடமடென்று குடித்து, உடனேபடுத்துத்

துப்பட்டியால் நன்ருய்ப் போர்த்துக் கொள்வேன். வீசுங்காற்றில் மூச்சுவிட வாயைமாத்திரம் துணியால் மூடாதிருப்பேன். ஒருவேளை வீட்டில் வைத்திருந்தால் நவாசார உப்புத் திராவகத்தில் ஒரு உச்சிக் கரண்டி தண்ணீரில் விட்டுக் கலக்கிக் குடிப்பதும் உண்டு. வெ ந்நீர் குடிப்பதற்கு முன்னமே அந்தத் திராவ கம் கலந்து குடிப்பது பின்னும் வாசி. படுத்து அரை நாழிகை செல்லுமுன் உடம்பு முழுதும் சலசலென்று வெயர்க்கும். காலையில் எழுந்திருக்கும்பொழுது பெரும்பாலும் சலதோஷம் இராமல் நீங்கிப்போம்.

**துளசியம்மாள்.**—இது மிகவும் சுளுவான சிகிச்சை தானே.

**பச்சையம்மாள்.**—சுளுவானுலும் இது கைகண்ட மருந்து. செய்து பார்த்தால் உண்மை தெரியும். மனி தர்கள் கைக்கெட்டும் எளிய மருந்துகளைச் செய்து சுகம்பெறுவார்களானல், வைத்தியனைத்தேடித் தொலை வழி நடந்து வருந்தார்களே. தமக்குத்தாமே வைத் தியம் செய்யும் விவேகம் அவர்களுக்கு உண்டாம். அப்படி ஆகும் காலத்தில் வைத்தியர் தோள்மேல் ஏறிய சுமை மிகக் குறையும்.

**துளசியம்மாள்.**—சிவகாமிக்குப் பிணிதீர்க்க வைத்தி யர் வரவேண்டுமென்றீரே.

**பச்சையம்மாள்.**—ஆம் அது மெய்தான் வியாதி அற்ப மல்ல. புத்தியும் வித்தையுமுள்ள வைத்தியர் ஒருகண் பார்த்துத் தக்கசிகிச்சை செய்து தீர்க்கவேண்டுவது. நான் சொன்னது சாமனிய ஜலதோஷத்தைப்பற்றியே

யல்லாமல், இவ்விதக் கடும் வியாதிக்கல்ல. தாய்மார்கள் உடம்பு வணங்கித் தாமும் தம் பிள்ளைகளும் அனுதின முங் குளித்து தாம் இருக்கும் வீட்டையும் சுத்தி செய்து, வீட்டில் காற்று உலாவப் பலகணிகளைத்திறந்து விட்டு வீட்டுத் தரையை தூசில்லாமல் விளக்கி, தாராள மாய்த் தண்ணீர்ஊற்றி யலம்பிவருவார்களானால், இப் பொழுது எங்கும் வியாபித்திருக்கும் வியாதிகள் உண் டாக நிமித்தியமே இல்லை. ஒரு வேளையில் உண்டாயி னும் அவை பெரும்பாலும் எளிய கை மருந்துகளாற் சொஸ்தமாகத்தக்க அற்ப நோய்களாயிருக்கும். காண்ப வைகளைக் கருத்தாய் விசாரித்து யோசிக்கும் இயற்கை அறிவு நாட்டோடிப் புத்தியுள்ள தாய்மார்களுக்கு அம்மருந்தின் விவரத்தை எவரும் சொல்லிக்கொடுக்க வேண்டுவதில்லை, அவர்கள் தாமே கண்டறிவார்கள். நோயாளிகளை உபசரிக்கும் தாய்மார்களுக்கு இந்த இய ற்கை அவசியமிருக்க வேண்டும். இதற்கு மருந்தும் ஈடல்ல, வைத்தியரும் ஈடல்ல. "மந்திரம் கால் மதி முக்கால்" எனப் பழமொழியும் இருக்கின்றது. கையுப சாரத்திற்கு மிஞ்சும் கடும்பிணிகளோ, வைத்தியர் சாமர்த்தியத்தினாலும் மருந்து பலத்தாலும் உபசாரத் தாலுமன்றி மற்றொரு விதத்தாலும் நீங்காது. நான் இதிற் குறிப்பித்தவைகள் சிகிச்சா உபசாரம் செய் பவர்களுக்கு முக்கியமானவைகள். இவைகளைத் திருப் பித் திருப்பி எத்தனை முறை சொல்லினும் ஏற்கும். வீட்டுக்குப்போகும் மார்க்கத்தில் பண்டிதர் சந்திர

சேகரமுதலியாரைக்கண்டு செய்திசொல்வேன். இன்று சாயரக்ஷை அவர் இங்கே வருவது நிஜம். அம்மா சிவகாமி, பயப்படாதே, உனக்கு இந்த நோய் சொஸ்தமாகும், சுகமாயிருங்கள், போய்வருகிறேன் என்று செலவு பெற்றுக்கொண்டு போகும் வழியில் பச்சையம்மாள் பின்னும் இரண்டு மூன்று வியாதியுடையவர்களைக்கண்டு அவரவருக்கு வேண்டும் உபசாரம்செய்து, மருந்தின் முறையைச் சொல்லி, பொழுதுமறைய வீடு சேர்ந்தாள். இவள் வசிக்கும் வீடு சிறிதாயினும், வெகு சுத்தியாயிருக்கும். அங்குள்ள மணை, நாற்காலி, முக்காலி, கட்டில், பெட்டிமுதலிய சில சாமான் தட்டுமுட்டுகள் அங்கங்கே ஒழுங்காகவும் பணிக்கையாகவும் வைத்திருந்தன. அன்றிராத்திரி காற்றொடுக்கமாயிருந்தது. அப்போது பூஞ்செடிகளில் இலைகளும் அசையவில்லை. ஆனதுபற்றிப் பலகணிக்கதவு திறந்திருந்தது. பலகணியோடு பொருந்த வட்டமான முக்காலி ஒன்று வைத்திருந்தது. அதன் பக்கத்தில் விசுப்பலகையின்மீது உட்கார்ந்து பச்சையம்மாள் அண்ணாந்து பார்த்தபடி, தெய்வ சிந்தனையா யிருந்தாள். திருவாய்மொழி புத்தகம் ஒன்று முக்காலிமேல் திறந்து வைத்திருந்தது. பிறருக்கு உபகாரம்செய்து பகற்பொழுதை இனிதாகக் கழித்து வழக்கப்பட்ட பச்சையம்மாள் இராத்திரிகாலத்தில் நித்திரைசெய்து இளைப்பாறி விழித்திருக்கும் பொழுது, தனக்குச் சித்தசுத்தியும் பக்தியும் ஞானவிர்த்தியும் அருளும்படி கடவுளைப் பிரார்த்திப்பாள்.

மேலே பச்சையம்மாளைக் குறித்துச் சொல்லிய வரலாறுகளை வாசித்துச் சிந்திக்கும் அனைவருக்கும் நற்புத்தியும், நல்லொழுக்கமும், பிறர்சுகத்தில் விருப்பமும், திரிகரண சுத்தியும் ஒருவாறு உண்டாகாதிராதே.

இதுவரையில் படித்து வந்த இந்த கதையினால் நாமறியத்தக்க புத்திமதி யாதென்று பார்ப்போம். எவரும் செய்யாத காரியத்தை ஒருவரும் செய்வதுகூடாது. ஒருத்தி செய்ததையோ, அவளைப்போல ஒன்பது பேர் செய்யினும் செய்யலாம். பச்சையம்மாளைப் போல் யாவரும் நோயாளிகளுக்கு சிகிச்சா உபசார முயற்சி ஒன்றையே கைக்கொள்வது அசாத்தியபடாது. அவளைப்போல் ஸ்திரீகள் தன் கணவனை இழந்து, புத்திரர் புத்திரிகளைப் போக்கடித்து, வீடு வாசல்விட்டு, ஊரெங்கும் திரிந்து தனக்குச் சம்பந்தம் அல்லாதவேலைச் சுமையைத் தன் தலைமேல் ஏற்றிச் சுமக்கவேண்டுமென்று நாம் சொல்ல வரவில்லை. அப்படிச்செய்வது கிரமமென்று கடவுள் அவரவருக்கு அமைத்த செய்கடனையே அவரவர் செய்வது தருமம். இவ்வரம்பு கடந்து நடப்பவருக்குத் தெய்வானுகூலம் கிடைக்கமாட்டாது. நாம் இங்கே வற்புறுத்திச் சொல்வதெல்லாங் கூடி ஒன்று தான். அதாவது பெண்பிள்ளைகள் அனைவரும்,முக்கியமாய் அந்தந்தக்குடும்பத்தில் பிள்ளைகளைப்பெற்று வாழும் தாய்மார்கள்யாவரும் அற்ப நோய்களுக்குத் தங்கள் கைக்கு எட்டும் சுளுவான மருந்தின் விவரமும், அது செய்யும் முறையும் தேற விசாரித்தறிந் திருப்பது தீராக்கடமையாம்.

ஒ ஸ்திரீ ஜனங்களே! கருணாநிதியாகிய ஜகத்திரக்ஷகனுக்குத் தன் சிருஷ்டிவர்க்கங்களாகிய ஜீவகோடிகள் படும் உபத்திரவங்களில் ஆனந்தமுண்டென்று எண்ணுகிறீர்களா? இல்லையே. பிரகிர்திவஸ்துக்கள் சமஸ்தமும் ஜீவகோடிகளின் நல்வாழ்க்கைக்கும் சுகத்திற்கும் அநுகூலிக்க வேண்டுமென்பதே திருவுளப்பாங்கு. அத்திருவுள்ளத்தில் என்றும் அருள்சுரக்கும். அத்திருவுள்ளத்து நினைவின் பயனை நாம் அக்கிரமத்தினாலும் அவிவேகத்தினாலும் அவமதித்துப் போக்கடித்து, சர்வ வல்லவராகிய கடவுள் தமது திருக்கரத்தால் அமைத்துப் பரமோத்தமமெனச்சாக்ஷி பகர்ந்த அரும்பொருளை நாசப்படுத்துவோர் நாம்தாம். நமது முயற்சியால் எளிதிற் பெறத்தக்க பெரும்பாக்கியத்தை முயற்சியின்றிக் கடவுள் அற்புதமாய் நமக்கு அநுக்கிரகம் செய்வார். இதை கவனித்துக் கொள்ளுங்கள். அவர் விதித்த சட்டதிட்டம் என்றைக்கும்; அதைக் காப்பவருக்குச் சுகமும், கடப்பவருக்குத் துக்கமும் உண்டாவதும் ஸ்திரமே.

பலவிதமாகச் சொல்லியுங் கேளாமல், நீங்கள் வீட்டுப் பலகணிக்கதவுகளைத் திவ்வியமான காற்று உட்செல்லாதபடி மூடிவைத்து, வீட்டில் பூர்த்தியாய்ச் சேரும் விஷக்காற்றை உச்சுவாச நிச்சுவாசம் செய்வீர்களானால், வர வர தேகம் மெலிந்து, பிணியால் வருந்தி இறந்துபோவீர்கள். இது நிஜம். படுக்கும்மெத்தை, உடுக்கும் ஆடை, எடுத்த உடம்பு இவைகளைச் சுத்தி செய்யாதிருப்பீர்களானால், நேரிடும் கெடுதிகளை நீங்க

ளே அநுபவிக்கவேண்டும். சரீரத்திற் சேரும் அழுக்கு வெயர்வை ரூபமாய் ரோமத் துவாரத்தால் வெளிப் படும். இது சரீரத்தின் இயற்கை. அழுக்குநீர் தடையில்லாமல் வெளிப்பட ரோமத் துவாரம் திறந்திருக்க வேண்டும். அதில் ஊத்தை அடைந்திருக்க விடுவீர்களானால், சரீரம் வெயர்க்காது. வெயர்வை வெளிவரும் வழியில்லாமையால் உள்ளடங்கி யிருந்து, நாளாவட்டத்தில் கட்டி, புண் சொரிசிரங்குகள் புறப்படும், நாளு வியாதிகளும் உண்டாகும். யாவருக்கும் வருவது வியாதியானாலும், அதை வருவிக்கும் ஏதுக்கள் உங்கள் ஒட்டாரமும் அசட்டையும் சோம்பலுமே யாம்.

ஓ ஸ்திரீஜனங்களே, ஸ்திரீஜனங்களே! உங்கள் உத்தரவாத பாரம் சொற்பமானதுமல்ல. அதைக் குறித்து நான் சொல்வதைச் சற்றே கவனமாய்க் கேளுங்கள். முக்கியமாய் மனிதர்கள் சுகத்திற்கும், அதன்பயனாக விளையும் சந்துஷ்டிக்கும் நீங்களே காரணர். ஆடவர் தொழிலை நீங்கள் செய்ய நிமித்தம் இல்லை. உங்களுக்கு அவகாசம் ஏது? உங்களுக்கு இயல்பான வேலையைச் செய்து முடிக்கவே உங்கள் காலம் போதாதே. இனி உங்களுக்கு உண்டாகும் சந்ததிகளுக்குப் பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், பாலூட்டுந்தாய், கைத்தாய், செவிலித்தாய் என தாய்மார்களாகப்போகிற நீங்கள் உங்கள் பிள்ளைகளைத் தேகசுகமும் பலமும் சௌரியமும் உடையோராகும்படி வளர்த்துப் பாதுகாத்து வருவதிலும் உத்தமமான தொழில் மற்றென்ன இருக்கிறது? பெண் பாலர்களே,

மிகுபாரமும் பழியுமுள்ள உங்கள் நிலமையை நிமிஷமும் மறவாதிருங்கள். உங்கள் வயிற்றில் உருவாகி ஜனிக்கும் குழந்தைகள் அனவாதமும் அழிவில்லாத இயற்கை அமைந்த ஜீவன்களல்லவா. இதை உங்கள் உள்ளத்தில் மறவாமல் வைத்திருப்பீர்களாக.

---

*[For much of the information contained in the following simple remedies and prescriptions, I am indebted to the little tract entitled "The Cook and the Doctor," and to Mr. V. Varadappa Naidu, Apothecary, General Hospital, Madras.]*

---

## சிகிச்சை வகையும் மருந்து செய்யும் முறையும்.

அபாயமான ரோககுணங்கள் இவையென்றும், அற்பமான நோயின் குணங்கள் இவையென்றும், பகுத்தறிவதற்கு உதவும் மாருக விதி கூறுவது அசாத்தியம். சாதாரண குணங்கள் சிலவற்றையும், அவைகளுக்கு உரிய மருந்துசெய் முறைமையையும் சொல்வோம். குளிரால் தேகம் நடுங்குதல், வயிற்றுநோய், பக்கவலி, சோர்வு, மயக்கம், என்னும் இவ்வித குணங்களைக் கண்டால், விசாரமற்றிருக்கக் கூடாதல்லவா. அப்பொழுதே தகுதியான வைத்தியனை அழைத்துக் காட்டி, அவர் சொல்லும் சிகிச்சை செய்யவேண்டும். முக்கியமாய்ப் பெரிய குடும்பங்களில் அடிக்கடி உண்டாகும் அற்ப பிணிகளுக்கு ஏற்கும் மருந்து எப்பொழுதும் கைக்குக் காவலா யிருக்கவேண்டும்.

தித்திப்புப்பண்டம் மிதம் தப்பித் தின்றுவது, வேறு எந்தவிதத்திலாவது குழந்தைகளுக்கு அஜீரணம் மலச்சிக்கு முதலிய சிறு நோய்கள் உண்டானுல் அதற்கு மருந்து :—

1. நாணயமான சீனக்கிழங்கு (ரூபார்ப்பு) கால் பலம், உழமண்ணுப்பு கால் பலம், சுக்குச் சூரணம் கால்பலம்,

இம் மூன்றும் கலந்து புட்டியில் அடைத்து வைத்திருந்து, வேண்டும்பொழுது குழந்தை வயசுக்கு ஏற்க, அரை உச்சிக்கரண்டிமுதல் ஒரு உச்சிக்கரண்டிவரையிலும் எடுத்து, மிளகு கஷாயம் அரைப் பலத்தில் கலக்கிக் கொடுக்கவும். மந்தத்தை யடித்து இரண்டொருதரம் மலத்தைக் கழிக்கும்.

2. குழந்தைகளுக்குப் பேதிக்குக் கொடுக்கவேண்டுமானுல் சிற்றுமணக் கெண்ணெய்க்கு மிஞ்சின மருந்தில்லை. சலதோஷங் கண்டிருந்தால் அப்பொழுது பச்சை எண்ணெய்யாகக் கொடுக்காமல் சற்றே சுட வைத்துக் கொடுக்கவேண்டும். இதை உபயோகப் படுத்தும் முறை: முலை உண்ணும் சிறு குழந்தைகளுக்கு அரை உச்சிக்கரண்டி; இரண்டுவயது குழந்தைகளுக்கு ஒன்று. இப்படி வயது ஒன்றுக்கு அரைக் கரண்டி விகிதம் கூட்டி ஆறு வயதுள்ளவர்களுக்கு மூன்று கரண்டி எண்ணெய் கொடுக்கலாம். ஆறு முதற் பத்து வயதுள்ளவர்களுக்கும் இதுவே பிரமாணம்.

3. காந்த மண்ணுப்புப் பெரும்பாலும் அனுகூலிக்கும் மருந்து. இதைப் புட்டியில் அடைத்துவைத்தால் நாட்பட்டாலும் பழுதாகாம லிருக்கும். சூடாறுத பாலில் இந்த உப்பை அரைப்பலம் அல்லது ஒரு உச்சிக்கரண்டி சேர்த்துக் கொடுக்கவும். இது சிறு குழந்தைகளுக்குத் தங்கமான பேதி.

4. வயிற்று வலிக்கு ஓமம் கைகண்ட மருந்து இரண்டு சிட்டிக்கை அல்லது ஒரு உச்சிக்கரண்டி அவ்

வளவு எடுத்து பொடிபண்ணி, வெந்நீரிற் கலந்து, ஒரு கிண்ணத்தில் சற்றே ஊறினபிறகு வடிக்கட்டி கொடுக்கவும். வாயு உபத்திரவம் இருந்தால், காந்த மண் ஒருச்சிக்கரண்டி அந்த ஓம ஜலத்தில் போட்டுக் கலக்கிக் கொடுக்கவும்.

5. பித்தாதிக்கத்தால் வரும் தலைநோவுக்கும் மற்ற நோய்களுக்கும் கக்குபாலை வேரில் கால் பலப் பொடி செய்து வெந்நீரில் கலந்து சாப்பிட்டால், பித்தமெல்லாம் வெளிப்பட தலைநோய் நீங்கிப்போம். தலைநோவுக்கு நொச்சிலி இலையை வதைக்கி தலைக்குக் கட்டலாம். சுக்கை முலைப்பால்விட்டு இழைத்துப் போட்டுக் கரண்டி நெருப்பால் காச்சுவதும் உண்டு.

---

* ஒருமுறை கொடுக்கும் மருந்து அளவிடும் விதி.

பெரியவர்களுக்குக் கொடுப்பது மூன்று பங்கானால், பதினாறு வயதுள்ள ஆண் பெண் இருதிறத்தாருக்கும் இரண்டு பங்கு; ஏழு வயதுள்ளவர்களுக்குப் பாதி; மூன்று வயதுள்ளவர்களுக்குக் கால்; ஒரு வயதுள்ளவர்களுக்கு அரைக்கால்:

---

## ஔஷதமானம்.

---

| | | |
|---|---|---|
| 60 துளி ... ... | | ஒருச்சிக்கரண்டி. |
| 1 ட்ராம்... ... | | |
| 2 உச்சிக்கரண்டி... | | ஒரு சிற்றாலக்கரண்டி. |
| 2 ட்ராம்... ... | | |
| 2 சிற்றாலக்கரண்டி | | ஓராலக்கரண்டி. |
| 4 உச்சிக்கரண்டி... | | |
| 2 ஆலக்கரண்டி ...... | | ஓரௌன்ஸ். |

## கண்ணோவுக்குக் கைகண்ட மருந்து நீர்.

படிகாரம் அரைப் பலத்தை ஒரு படி நீரில் போட்டுக்கலந்து அதில் மெல்லிய வஸ்திரத் துண்டை நனைத்து கண்ணின்மேல் போட்டுக்கொண்டேவந்தால் கண்ணிலிருந்த சிவப்பு வாங்கிப்போய்விடும்.

## கோப்பளத்திற்கு மருந்து.

மெழுகு அரைப்பலத்தை இரண்டு பலம் தேங்காயெண்ணெயில் போட்டுக் காய்ச்சி எடுத்துவைத்துக்கொண்டு தடவினால் ஆறிப்போய்விடும்.

## காசம் இருமல், எலும்புருக்கி இவைகளுக்கு மருந்து.

நன்றாய்த் தடிக்கக் காய்ச்சின பார்லி அரிசிக் கஞ்சி ஆழாக்கு கறந்தசூடு ஆறாத பசுவின்பால் ஆழாக்கு இரண்டும் கலந்து, வெடியுப்புப் பொடி ஐந்து நெல்லெடை, சீனா கற்கண்டு கொஞ்சம் போட்டுக்கலக்கிக் காலையில் எழுந்திருக்கும்பொழுதும், ராத்திரியில் நித்திரை செய்யப் போகும்பொழுதும், உட்கொள்ளவும். இவ் வழக்கத்தை இடையில் நிறுத்தாமல் நாட்பட அனு

சரித்துவரவேண்டும். வேறு மருந்துக்கு இதனுல் விக்கினம் இல்லை. வெடியுப்புப் பொடி சேர்ந்திருப்ப தனுல் நித்திரையில் சரீரம் வெயர்த்தாலும் வெயர்க்கும். வெயர்க்காவண்ணம், நித்திரைசெய்யப் போகச் சற்று முன்னதாகவே இம்மருந்து சாப்பிடவும்.

---

## இருமலுக்கு மருந்து.

---

அதிமதுரத்தை நறுக்கி வாயில் அடைக்கி வைத்துக் கொண்டால் இருமல் சாந்தமா யிருக்கும். சிலர் நெஞ்சுக் குழியில் சுண்ணும்பு அல்லது விளக்கெண் ணெய் தடவுவதும் வழக்கம். பருத்த வெண்காயம் ஒன்று எடுத்து, ஒரு கிண்ணத்தில் ஸன்னமாய் அரிந்து போட்டு, சீனைச் சர்க்கரையைத் தூவி நன்ருகப் பிசறி வைத்தால், பதினைந் திருபது நாழிகைசெல்ல, பாகு போலத் தைலம் இறங்கி யிருக்கும். அதில் அடிக்கடி ஒருச்சிக்கரண்டிப் பிரமாணம் உட்கொள்ளவும். வரவர நெஞ்சு இளகி, இருமல் சாந்தியாகும்.

---

## கக்குவானுக்குக் கைகண்ட மருந்து.

---

கக்குப்பாலை வேரை தூளாக்கி கால் துலாம் நிறுத்து ஜலத்தில் கலந்து கொடுத்தால் கபம் அறுந்து வெளிப் படும். இதற்குப் படிகாரம் இசைந்த மருந்து. படி

காரத்தைப் பொடிசெய்து கொதிக்கவைத்து காலையும் மாலையும் மத்தியானமும் குன்றின்மணி யவ்வளவு தேனிற் குழைத்துக் கொடுக்கலாம்.

சிறு புட்டியில் ரம் சாராயம் அரைபுட்டி விட்டு, வெள்ளைப்பூண்டு நாலைந்து உரித்து நசுக்கிப்போட்டுப் புட்டியை அடைத்துப், பூண்டின் ரசம் இறக்கி, பின்பு வேண்டும்பொழுது மற்றொரு புட்டியிற் சிறிதுவார்த்து அதன் மூன்றில் ஒரு பாகம் நல்லெண்ணெய் கலந்து, மார்பிலும் இரு தோள்வழியாக முதுகிலும் இராப்பகல் இருபொழுது தேய்க்கவும். அது உலர்ந்தபின், இரண்டு உறுப்புகளிலும் புதுக்கம்பளித்துண்டுபோட்டு வைக்கவும்.

---

## நரம்புச்சுளுக்குக்கு மருந்து.

---

கருஞ் செம்பைஇலையை விளக்கெண்ணெய்விட்டு வதைக்கி சுளிக்கின இடத்தில் வைத்துக் கட்டவேண்டியது.

சாமந்திப்பூ நாலைந்து வைத்துக் கம்பளிப் பைக்குள் போட்டு அடுப்பில், கொதிக்கும் நீரில் இட்டு, எடுத்து முறுக்கிப் பிழிந்த பின் சுளுக்கின உறுப்பில் அக்கம் பளியைச்சுற்றி, உலர்ந்த துணியாற்கட்டி, இருபத்து நாலுமணி நேரம் கட்டவிழாதுவிட்டால், முக்காலே மூன்று வீசம் சுளுக்குத் தீரும்.

## இரத்தக்கட்டி.

சாதாரணமாய் அதிக வெப்பத்தால் இரத்தக்கட்டி உண்டாகும். அதனால் மிகுந்த குத்தல் உண்டாகும். இதற்கு சிகிச்சை போஸ்தகாய்த்தோலை ஜலம் விட்டுக் கொதிப்பித்து அந்த காய்ந்த ஜலத்தில் கம்பளித்துண்டு ஒன்றை இரண்டு கையிலும் இரண்டு முனைகளைப் பிடித்துக்கொண்டு தோய்த்துப் பிழிந்து முறுக்கி, அந்த சூடு ஆறாமலே கட்டியின்மீது ஒத்தடம் கொடுத்தால் நோய் வாங்கும். கட்டியானது சீக்கிரத்தில் பழுத்து உடைந்துபோய் விடும்.

போஸ்தகாய் கிடைக்காத இடங்களில் வேப்பிலை புளி இலை இவ்விரண்டையும் ஜலம் காய்ச்சுக்கொள்ளலாம்.

மேலும் கோதுமைத்தவிடு அல்லது அரிசித்தவிடு அல்லது உப்பு இதுகளை வறுத்து ஒத்தடங் கொடுக்கலாம். இவைகளால் நோய் தீராமற் போனால் ஊமத்தை இலையை விளக்கெண்ணெய் தடவி வதைக்கிக்கட்டியின் மீது போட்டு வைக்கவும். சீக்கிரம் கட்டி உடைய வேண்டுமானால், அரிசிமாவையாவது, ஆளிவிரைமாவையாவது கிளறி கட்டு கட்டவேண்டியது.

## சிரங்கு.

நீரடி வித்து பாலில் அரைத்துச் சிரங்குகளுக்குப் போடவும். விடாமல் இரண்டு மூன்று நாள் போட்டால் சிரங்கு போய்விடும்.

ஆமணக்கெண்ணெயும் முட்டைச்சாம்பலும் மயில் துத்தத்தூளும் கூட்டிக் குழைத்துப் போடுவதும் இன்னுட்டில் கைகண்ட மருந்துதான்.

சீமை நிலவேம்பை யறைத்துச் சிரங்கு மீது தடவி னுலும் ஒலர்ந்து உதிர்ந்து போய்விடும்.

---

## பல் நோய்.

---

சீதளத்தினுல் ஈறு கட்டிக்கொண்டு பற்கள் நோ யெடுத்து பலர் பாதைப் படுகிறதுண்டு. இதற்குக் காட்டாமணக்குதான் சிறந்தகோடாலி. காட்டாமணக் குக் கொம்பை சாண்சாணுகத் தறித்துக்கொண்டு அடு ப்புத் தணலில் ஒரு நுனியைச் சொருகிச் சுட்டு ஒவ் வொன்றுய் எடுத்து நோயுள்ள பற்களின் மீது படும்படி மற்றெரு நுனியைப் பிடித்துக்கொண்டு வைத்து சூடு பொறுக்கக் கடித்தால், நோய்க்கு இதவா யிருப்பதுந் தவிர சீதளத்தை பரிகரித்து பல் நோயைப் போக்கி விடும்.

---

## வாயுவு நோய்க்த மருந்து.

---

ஊமத்தை இலை வாதநாராயணயிலை ரசத்தைப் பிழிந்து நோய்களுள்ள யிடங்களில் பற்றுபோடவும்.

---

## வயிற்றுப் பூச்சிகளுக்கு மருந்து.

முருக்கன் விதை இரண்டு, சுக்கு கால்துலாம், மிளகு கால் துலாம், இவைகளைப் பொடிசெய்து ராத்திரியில் படுத்துக்கொள்ளும்போது வாயில் போட்டு ஜலத்தை கொஞ்சம் கொடுக்க வேண்டியது. காலையில் சிற்று மணக்கெண்ணெய் கொடுத்தால் வயிற்றிலுள்ள பூச்சிக ளெல்லாம் விழுந்து விடும்.

## சாதாரணச் சுரங்கள்.

சீந்தில்கொடி ஒரு துலாம், மிளகு அறை துலாம் கிஷாயம் போட்டுக் கொடுத்தால் சாதாரணச் சுரங்கள் விட்டுப்போம்.

## பசிதீபனம்.

நிலவேம்பு கால் துலாம் எடுத்து கஷாயம் வைத்து அதை ஒரு நாளைக்கி மூன்றுதடவை கொடுக்கவும்.

## சீதபேதி.

வில்வபத்திரி மாதுளம் பிஞ்சு தினுசு ஒன்றுக்குக் கால் துலாம் எடுத்து அரைத்து உண்டைசெய்து கொடுக்கவும்.

கசகசா ஜாதிக்காய் பனைவெட்டுக் கற்கண்டும் நெய்யில் லேகியம் செய்து கொடுப்பது முண்டு. பச்சை கருவேப்பிலை மாங்கொட்டைப் பருப்புத் துவையல் அல்லது குழம்பு ஆகாரத்தில் மருந்தாகப் பிரயோகிப்பதும் இலேசான உபாயம்.

---

### நெருப்புப் பட்ட புண், வெந்நீர்ப்பட்டு வெந்த புண், நரம்புச்சுளுக்கு முதலியவைகளுக்கு மருந்து.

---

தேங்காயெண்ணெய் கற்சுண்ணாம்பு தெட்டைநீர் இவ்விரண்டையும் சரிப்பங்காக எடுத்துக் கலந்து குழைத்தால் வெண்ணெய்போலாகும். இந்த எண்ணெயில் பஞ்சை நனைத்து நெருப்புப்பட்ட காயத்தின் மேல் படியவைக்க வேண்டியது.

---

### நசிங்கித் தோல் உரிந்த காயம்.

---

நெரிவுமுதலிய காயத்திற்கு இரத்தத்தைக் கரைக்கும் ஓர் வேரினாற்செய்த Tincture of Arnica திராவகம் தங்கமான மருந்து. அது மருந்துக்கடையில் ஒரு ஔன்ஸ் அரை ரூபாய்க்கு வாங்கலாம். அதைப் புட்டியில் அடைத்து வைத்திருக்கவேண்டும். இம்மருந்தில் ஒரு உச்சிக்கரண்டியும் குளிர்ந்த ஊற்று நீர் அரைபைன்டும் கலந்து அதில் ஒரு துணி நனைத்துப் போட்டால் நெரிவு காயம் எளிதில் மாறும். தோல் உரிந்து புண்ணாயிருந்தால் ஒருச்சிக்கரண்டியும் தண்ணீர் முக்கால் பைன்டும் கலந்து துணி நனைத்துப்போடவும்.

---

## வெட்டுப்பட்டகாயம்.

கல், கத்தி, இரும்பு, தகரம், மரம் இவைகளால் வெட்டுப்பட்ட காயங்களுக்கு சாம்பிராணித் திராவகத்தில் ஒரு துண்டு துணியை நனைத்து காயம்பட்ட இடத்தில் பதியவைத்தால், அது மெழுகுபோல் ஒட்டிக்கொள்ளும். அந்தக் காயம் ஆறின பின்பு சீலைதானே விழுந்துவிடும். அதுவரையில் அச்சீலையை எடுக்கலாகாது.

வெட்டுப்பட்ட இடத்தில் ரத்தம் வடிந்தால், ஒரு துலாம் படிகாரத்தைப் பொடிசெய்து ஒரு ஆழாக்கு ஜலத்தில் கலக்கி வைத்துக்கொண்டு துண்டுத்துணியை நனைத்துக் காயத்தின்மேல் போட்டு அது உலராமல் நனைத்துக்கொண்டே வரவேண்டும்.

---

நோயாளிகளுக்குப் பத்தியமுறை:—அந்தந்த நோயாளிக்குத்தக்க பத்தியத்தைக் குறித்து மாறுவிதிகளை ஏற்படுத்துவது கஷ்டம். இத்தேசத்தில் குலாசாரம், வழக்கம், ஜீவனோபாயம் முதலான இடம் பொருள் ஏவல்கள் அவரவருக்குப் பேதப்பட்டிருக்கிறபடி ஆகாரங்களும் பத்தியங்களும் பேதப்பட்டிருக்கும். இனமறிந்து பத்தியவகைகளை விரிவா யெழுதப்புகின் ஏடிடங்கொடாது. ஆயினும் பெரும்பாலும் வியாதியின் இயற்கையையும், நோயாளியின் தேகக்கூறையும் அறிந்து, இவ்வளவு உணவு இன்னருக்கு ஆகும் ஆகாதெனத் தீர்மானிக்கவேண்டும். எளிதிற் சீரணிப்ப

தாகிய எந்த உண்டியும் நோயாளிக்கு ஏற்கும். இது யாவரும் அங்கீகரிக்கத்தக்க மூலாதார விதி. ஒருண்டி ஒருவன் உடம்புக்கு ஏற்பதும் ஏற்காததும் சுயம்பாகி அதைப் பாகம் செய்கிற நேர்த்திக்கும் நேர்த்தியின் மைக்கும் தக்கபடி இருக்கும். வெண்ணெய்போல நெகிழ வெந்த இளங் கத்தரிக்காய் பாதிவெந்தும் வேகாதுமிருக்கிறகாயைக்காட்டிலும் எளிதிற் சீரணிக்கும். முக்கியமாய் பசுவின்பால் சரீரபுஷ்டிதரும். வைத்தியர் பால் உண்ண இடம் கொடுத்தால், வேண்டுமளவிற்கு உண்ணலாம். தங்கள் சொந்தகாரியத்தைப் போல இவ்விஷயத்திலும் ரோகோபசாரிகளும் தாய்மார்களும் அப்போதப்போது இருக்கும் ரோக குணத்தைப் புத்தி பூர்வமாகப் பகுத்தறிந்து நிதானித்து, நோயாளிக்கு ஏற்கும் பத்தியம் கொடுக்க வேண்டும். குழந்தைகள் முலைப்பால் உண்டு வளர்வதுஇயற்கை. அவைகளுக்குப் பெற்றதாய் முலைப்பாலினும் சிறந்த உண்டி மற்றொன்றும் இல்லை.

ஆனல் தாய்மார்கள் எண்ணுமற்செய்யும் தீமை சில உண்டு. குழந்தை சற்று வளர்ந்து தாய் மடியில் உட்கார்ந்திருக்கும் பருவம் வந்தகாலத்தில், தாய் தான் உண்ணும் எவ்வகை உணவையும் தன் அரிய பிள்ளைக்குக் கொடுப்பதுண்டு. அதற்குச் ஜீரண சக்தி அற்பமென்று அறிந்து கொள்ளாதவளாய், தாய், பிள்ளை உருக்கத்தால் இப்படிசெய்வாள். செய்யவே குழந்தையின் தேகசுகம் கெடும். அஜீரணபேதியும் வாந்தியும் உண்டாம்; பின்பு அக்குழைந்தைக்கு வழக்கமான உண்

டியில் வெறுப்பும் உண்டாகும். வரவரப் பிள்ளை சுகித் தோங்கி வளராமல் உணவு குறைந்து உடல்மெலிந்து உலர்ந்து, மதிமயக்கங்கண்டு கண் சொருகலிட்டு இறந்து போம். ஒரு வயசாகுமுன் இறந்தவர்கள் தொகை விவரத்தைச் சர்க்கார் கணக்கர் எழுதிவைக்கும் ஜன சங்கியை அறிக்கையினல் இதன் மெய் பொய் அறியலாம்.

தாய்மார்கள் புத்தி பூர்வமாக நடந்து, தங் குழந்தைகளின் இளந்தை உடம்பிற்கு ஏற்கும் மிருதுவான பத்தியம்செய்து ஊட்டி வளர்ப்பார்களானல், அவைகளுக்கு தேக சுகநிலை தடுமாறவும், மெலிவும் சோர்வும் உண்டாகவும், இளமையில் இறந்துபோக நிமித்தியமும் இல்லையே. வியாதி உபத்திரவத்தால் குழந்தை அங்கோ இங்கோ வென்று சந்தேகஸ்திதியில் இருக்கவும், தாய்மார்கள் இராப்பகல் உண்டி உறக்கமற்று அதை வைத்திருந்து வருந்தவும் ஏது இல்லையே. பெற்றெடுத்த தாய்மார்கள் பிள்ளையைப் பக்குவம் அறிந்து பரிபாலித்து வருவார்களானல், அது நாளொருவண்ணம் பொழுதொரு மேனியாக வளர்ந்து சுகித்து உடல் ஊரத்து வாழ்ந்திருக்குமே.

தாய்மார்களே! உங்கள் மனம்போனப் போக்கில் குழந்தைகளுக்கு ஏற்குமென்று எண்ணி ஊட்டிய உண்டி அவைகள் சுகத்துக்கு கேடாய் விளைந்தது கண்டீர்களே. இனியாவது புத்திபூர்வமாய் நடவுங்கள். அறிந்தோர் சொல்லும் பத்தியத்தை உங்கள் பாலியருக்கு ஊட்டி, அதன் பயனைக்கண்டு களிகூருங்கள்.

இம்மை மறுமை இருமையிலும் உங்களுக்குத் தேவா னுக்கிரகம் உண்டாம்.

எதாயினும் வேலை முகாந்தரமாக இரண்டொரு நாழிகை நேரம் குழந்தையை வளர்த்திவிட்டுப் போக வும் நேரிடுமே. கனவிலும் மறவாமல் நீங்கள் என்றும் நினைக்கத்தக்க புத்தி ஒன்று சொல்லக் கேளுங்கள். அறியாக்குழந்தைகளை அழற்றும் வெயிலில் நொடிப் பொழுதேனும் வளர்த்த ஒண்ணாது. வளர்த்தினால், வெயில்காந்தி மூளையைத்தாக்கி, வளர வளர அக்குழந் தைகளைக் கடுங்கோபிகளாக்கினும் ஆக்கும், நேத்திர தாதுகளிற் பாய்ந்து, தாது பலத்தைக் குறைத்துக் கண்ணைக் கெடுக்கினும் கெடுக்கும். ஆனதுபற்றி மிக வும் ஜாக்கிரதையா யிருங்கள். வெயிற் சூடு உறைக் கும் இடத்தில் அதற்கு எதும் உபாயம் செய்யாமல் குழந்தைகளை ஒருபொழுதும் வளர்த்திவைக்க வேண் டாம்.

கடைமொழி யாகச் சுருக்கிச் சொல்லில், புத்தகங்கள் பல எழுதியென்ன? உபநியாசங்களைப் படித்துப் போ தித்து மென்ன? தனவந்தரானாலும் தரித்திரரானாலும் மாதர்களுக்கு மனோபாவம் நன்றாயிருக்க வேண்டும். பச்சையம்மாளைப்போல மன்னுயிரைத் தன்னுயிரைப் போல் பார்க்கவேண்டும். அன்னியரிடத்தில் பூததயை பச்சாத்தாபம் ஈவு இரக்கம் இல்லாவிட்டால் புத்தகங் கள் உபநியாசங்கள் மாத்திரம் என்னப் பிரயோஜனத் தைத் தரும்? இவை பிரயாணிகள்செல்லும் மார்க்கங் களில் நிறுத்தியிருக்கும் கைகாட்டி மரக்கொம்புகள்

போல்தானே. அவை கொம்புகளானாலும் முழுதும் பயனற்றவையல்ல; வழிதப்பித் தடுமாறுகிறவர்களுக்குச் சரியான வழி ஈதென்று சுட்டிக்காட்டி அவர்களை நன்மார்க்கத்தில் திருப்பிவிடும் நன்மையை அவை செய்கின்றனவல்லவா!



# வைத்தியநீதிப் பழமொழி.

அகத்திலுள்ளநோய் முகத்திற்காட்டும்.
அக்கினியாற்சுட்ட புண் விஷமிக்காது.
அஞ்சினவனை நோய்வெருட்டும்.
அடித்துப் பால்புகட்டுகிறதா?
அடியிலுள்ளநோய் நடுவுக்கும் முடிவுக்கும் உண்டு.
அமரிக்கையான வைத்தியம் ஆயிரம்பெறும்.
அயனிட்டகணக்கு ஆருக்கும் தப்பாது.
அரும்சுனை நீர் உண்டால் அப்பொழுதே ரோகம்
அரையிற்புண்ணும் அண்டைவீட்டுக்கடனும் ஆகாது.
அவசர வைத்தியம் அல்லற்படுத்தும்.
அழுதபிள்ளை உரம்பெறும்.
அளவுக்குமிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாம்.
அனுபோகம் தொலைந்தால் அற்ப அவிழ்தமும் பலிக்கும்.
அன்னமயம் பிராணமயம்.
அன்னம் மிக உண்பானும் ஆடை அழுக்கு ஆவானும் பதர்.
அன்னம் ஒடுங்கினால் அஞ்சும் ஒடுங்கும்.
ஆகிறகாலத்தில் அவிழ்தம் பலிக்கும்.
ஆபத்துக்குப் பாவமில்லை.
ஆலசியம் அமிர்தம் விஷம்.
ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி.
ஆவல்மாத்திரம் இருந்தால் என்ன, அன்னம் இறங்கினால்
அல்லவோ பிழைப்பான்.
ஆறினபுண்ணிலும் அசடுநிற்கும்.
இடுக்கு அறையில் படுக்கலாகாது.
இரக்கமில்லா வைத்தியன் யமனுக்கு ஒப்பாவான்.

இருக்கவேண்டும் என்றால் இரும்பைத்தின்னு.
இருந்தல்லோ படுக்கவேண்டும்.
இருப்புச்சலாகையை விழுங்கிப்போட்டு இஞ்சிச்சாறு குடித்
தால் தீருமா?
இரும்பு பிடித்தகையும் சிரங்கு பிடித்தகையும் சும்மா
இளமையிற்பழக்கம் எப்போதும் மறவாது. [யிராது.
இறங்கும்பொழுதிலே மருந்துகுடி.
இன்று இருப்பார் நாளைக்கு இல்லை.
இன்பம் ஓரணுவாம் துன்பம் பெருமலையாம்.
உடற்கூறுதெரிந்த வைத்தியனை நீக்கலாகாது.
உண்டபிள்ளை உரஞ்செய்யும்.
உண்டாலும் உருதிப்பட உண்ணவேண்டும்.
உண்டாற் கொல்லும் விஷம்.
உண்டிசுருங்குதல் பெண்டிர்க்கழகு.
உண்டால் தீரும்பசி கண்டால் தீருமா.
உயிர் உள்ளளவும் மருந்து கொடு.
எடுப்பாரும் பிடிப்பாரும் உண்டானால் இளைப்பும் தவிப்பும்
எட்டிப்பழத்தை இச்சிக்கலாமா? [உண்டு.
எண்ஜாணுடம்பிற்கும் சிரசேபிரதானம்.
எண்ணமெல்லாம் பொய் எமன் ஓலை மெய்.
எழுதியவிதி அழுதால் தீருமா.
ஒருகுடம்பாலுக்கு ஒருதுளி புளை.
ஒருமரத்துப்பட்டை ஒருமரத்திலே ஒட்டுமா.
ஒருமிளகும் நாலு உப்பும் போதும்.
கடற்கரைக் காற்று சுகத்தைக்கொடுக்கும்.
கடுகு சிறுத்தாலும் காரம்போகாது.
கடுக்காய்க்கு அகணிநஞ்சு, சுக்கிற்குப் புரணிநஞ்சு.
கட்டப்பாரையை விழுங்கிச் சுக்குக்கஷாயம் குடித்தால்
கட்டிலைத்திருப்பிப்போட்டால் தலைவலிபோகுமா. [தீருமா.

கந்தையானாலும் கசக்கிஉடு, கூழ் ஆனாலும் குளித்துக் குடி.
கரும்புகசக்கிறதும் வேம்பு இனிக்கிறதும் வாய்க்குற்றம்.
கலப்பாலில் ஒரு துளிவிஷம் கலந்தாற்போலாச்சு.
கழுதைப்புண்ணுக்குப் புழுதிமருத்து.
கறந்தபாலைக் காய்ச்சாமற் குடித்தால் காசவியாதி தானே
கறுப்பு வெளுப்பாகாது கசப்பு இனிப்பாகாது. [எடுபடும்.
கனவில் உண்டசோறு பசிதீர்க்குமா?
கனியைவிட்டுக் காய்தின்கிறதா?
காணிமந்தம் கோடிதுக்கம்.
காலத்தாலன்றிப் பழுக்குமா.
காலில்பட்டது கண்ணில் பட்டதுபோல்.
காலைதுயில்வாரும் மாலை விழித்திருப்பாரும் பதர்.
கிணறுவெட்டித் தாகம் தீர்க்கலாமா?
கிழக்குடலுக்குச் சோறும் இடிசுவருக்கு மண்ணும் இடு.
கீரையை இரண்டுகறி பண்ணாதே.
கீறி ஆற்றினால் புண் ஆறும்.
குஞ்சிரிப்புக்கு மருந்துசாப்பிட உள்ள சிரிப்பும்போச்
குடல்கொண்டது கொள்கை. [சுதே.
குணம்பாதி கொண்டநோவுபாதி.
குரங்குப்புண் ஆறாது.
குழந்தைபட்டினியும் கோயில்பட்டினியும் இல்லை.
குறும்பியுள்ளகாது தினவுதின்னும்.
கூழ் என்றாலும் குடித்தவன் பிழைப்பான்.
கெட்டபால் நல்லபாலாகுமா?
கொல்லுகிறதும்சோறு பிழைப்பிக்கிறதும் சோறு.
சதை உள்ள இடத்திலேதான் கத்திநாடும்.
சந்துகாற்றில் தலைவைத்துப் படுக்காதே.
சரக்குகண்ட இடத்திலே பிள்ளைக்கு அவிழ்தம் கொடுக்க
சாகிறவனாயில் வைத்தியம் விடலாகாது. [நினைக்கலாமா.

சாகிறதுபோலிருந்து வியாதி தீருகிறதும் உண்டு.
சாட்டு இல்லாமற் சாவு இல்லை
சாணு வயிறு சரீரமெல்லாம் வயிறு ?
சித்திபெறாத மருந்தும் மருந்தோ பெற்றுப்படையாத பிள்ளையும் பிள்ளையோ ?
சிறுகச் சிறுகத்தின்றால் மலையையும் தின்னலாம்.
சிறுகுழந்தை யில்லாத வீடும் வீடு அல்ல, சீரகம் இட்டு ஆக்காத கறியும் கறியல்ல.
சுகதுக்கம் சுழல் சக்கரம்.
சுக்கு அறியாத கஷாயம் இல்லை.
தலைநோய் தனக்குவந்தால் தெரியும்.
தலையில்வரும் மயக்கம் சருவமும் மயக்கம்.
தன்னோய்க்குத் தானேமருந்து.
தாது அறியாதான் பேதை வைத்தியன்.
தாய்முகம்காணாத பிள்ளையும் மழைமுகம்காணாத பயிரும்.
தாய்முலைப்பாலுக்குச் சமானமில்லை.
தான்சாக மருந்து உண்பார் இல்லை.
தான்தின்கிற நஞ்சு தன்னைத்தான் கொல்லும்.
தினவு எடுத்தவன் சொறிந்துகொள்ள வேண்டும்.
தின்பதுகொஞ்சம் சீவன் நிலை இல்லை.
தின்றமண்ணுக்குத் தக்கசோகை.
தின்னத்தெரியாமல் தின்பானேன் ?
தீராநோய்க்கு மருந்தகப்படாது.
துஞ்சி நின்றான் மிஞ்சி உண்ணான்.
துன்பத்திற்கு இடங்கொடேல்.
துன்பம் முந்தி இன்பம் பிந்தி.
தூக்கம்பிடித்துத் தூங்கினால் பாதிவியாதி விட்டதாம்.
தூக்கிவளர்த்த பிள்ளையும் தடையில் வைத்துத் தைத்த இலையும் உருப்படாது.
தூங்காதவனுக்குச் சுகம் இல்லை.

தூங்கினவன் சாகிறதில்லை வீங்கினவன் பிழைக்கிறதில்லை.
தெய்வசித்தம் இருந்தால் செத்தவனும் பிழைப்பான்.
தெய்வம் துணைக்கொள், தேகம் அநித்தியம்.
தெய்வபக்திக்கு இரண்டாவது தேகசுத்தி.
தேடப்போன மூலிகை காலடியில் அகப்பட்டாப்போல்.
தென்றல் காற்று தெம்பு உண்டாக்கும்.
தேள் கொட்டப் பாம்புக்கு மந்திரிக்கிறதா.
தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும்.
தொத்துவியாதிக்கு எட்டநிற்கவேண்டும்.
நகத்தால் கிள்ளுவதைக் கோடாலிகொண்டு வெட்டுகிறதா ?
நஞ்சு நாற்கலம் வேண்டுமோ ?
நடந்தால் எல்லாம் உறவு, படுத்தால் பாயும்பகை.
நமன் அறியாத உயிரும் நாரை அறியாத குளமும் உண்டா.
நரை திரையில்லை, நமனும் அங்கில்லை.
நல்ல உயிர் நாற்பது நாளிருக்கும்.
நல்லமரம் நச்சுக்கனியைத் தராது.
நாடிக் குறியறியாமல் நோய் நிச்சயப்படாது.
நாற்றச்சோற்றுக்கு பதம்பார்ப்பானேன் ?
நித்தம் சாவார்க்கு அழுவார் உண்டா ?
நித்தியகண்டம் தீர்க்க ஆயுசு.
நித்திரை பகலிலே சத்துரு.
நித்திரை சுகம் அறியாது.
நீரும் கொல்லும் நெருப்பும் கொல்லும்.
நீர்மேல் குமிழிபோல் நிலையில்லாக் காயம்.
நீர்விளை யாடேல்.
நுரையைத் தின்றால் பசி பொறுக்காது.
நூற்றுக்கு இருப்பார் ஐம்பதில் சாகார்.
நூன்முறைதெரிந்து சீலத்தொழுகு.
நெல்லும் உப்பும் பிசைந்து உண்ணக்கூடுமோ ?

நொந்தகண் இருக்க நோகாக்கண்ணுக்கு மருந்தா.
நொறுங்கத்தின்றூர்க்கு நூறுவயது.
நோயற்றவாழ்வே வாழ்வு.
நோயாளிக்கு ஆசைவார்த்தை போதும்.
நோயாளி விதியாளி ஆனல் பரிகாரி பேராளி ஆவான்.
நோயாளிக்குத் தெரியும் நோயின் வருத்தம்.
நோய்கொண்டார் பேய்கொண்டார்.
நோவு ஒரு பக்கம் இருக்கச் சூடு ஒரு பக்கம் போடலாமா?
பசியில்லாதவனுக்குக் கருப்புவந்தாலென்ன?
பசியாமுன் புசியேல்.
பசித்தவன் தின்னாததில்லை.
பசிருசி அறியுமா நித்திரை சுகமறியுமா?
பசிவந்திடில் பத்தும் பறந்துபோம்.
பஞ்சமில்லாக்காலத்தில் பசி பறக்கும்.
படிக்கிற பிள்ளை பாக்குப்போட்டால் நாக்குத் தடிப்பாய்ப் போம்.
பட்டகாலிலேயேபடும் கெட்டகுடியேகெடும்.
பத்திலேபதிவு, இருபதிலே இடக்கு, முப்பதிலே முடுக்கு, நாற்பதிலே நரை, ஐம்பதிலே அறிவு, அறுபதிலே சொறி, எழுபதிலே ஈளை, எண்பதிலே இருமல், தொண்ணூறிலே தூங்கல், நூறிலே வாங்கல்.
பரிகாரி உறவு தெருவாசல்மட்டும்.
பல் அசைவுபோடப் பசி ஆறும்.
பழகப் பழகப் பாலும் புளிக்கும்.
பழம் புண்ணாளி பாதிவைத்தியன்.
பாலருக்குப் பலம் அழுகை.
பாலே மருந்துமாம்.
பாலோடாயினும் காலம் அறிந்து உண்.
பாலசோதிஷம் விருத்தவைத்தியம்.
பித்தம் பத்துவிதம்.

பித்தனுக்குத் தன்குணம் நூலினும் செவ்வை.
பிரம்மா நினைத்தால் ஆயுசுக்குக்குறைவா?
பிறந்தவன் இறப்பதே நிசம்.
பிறர்பிணி தீர்த்தல் அறமெனத் தகும்.
புண்ணிலே கோலிடலாமா?
புத்தியீனர் குளிக்கப்போய்ச் சேற்றைப்பூசிக் கொள்வார்
புலி அடிக்குமுன்னே கிலி அடிக்கும். [கள்.
புறக்கடைமருந்து கவைக்கு உதவாது.
பெற்றது எல்லாம் பிள்ளையா இட்டது எல்லாம் பயிரா?
பொல்லாதகுணத்துக்கு மருந்துண்டா?
போனசுரத்தைப் புளியிட்டு அழைக்கலாமா?
மட்டானபோசனம் மனதிற்குமகிழ்ச்சி.
மண்டை உள்ளவரையில் சளி போகாது.
மண்ணால் ஆனாய் மண்ணாயிருக்கிறாய்.
மருண்டவன்கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.
மருந்துகால் மதிமுக்கால்.
மருந்தும் விருந்தும் மூன்றுநாள்.
மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.
மருவில்தின்ற சாப்பாட்டை லங்கணத்தில் நினைக்கலாகாது.
மலைபோல்வந்தது பனிபோல் நீங்கும்.
மழையும் பிள்ளைப்பேறும் மகாதேவருக்கும் தெரியாது.
மனக்கவலை பலக்குறைவு.
மனோவியாதிக்கு மருந்துண்டோ
மிகுந்தாலும் குறைந்தாலும் நோய்செய்யும்.
மின்னலைப்போல் பல்லைவிளக்கான் பதர்.
முள்ளாலேமுள்ளை எடுக்கவேண்டும்.
மூக்கைப்பிடித்தால் சீவன்போகும்.
மூலிகை அறிந்தால் மூன்று உலகமும் ஆளலாம்.
மூன்றுங்கட்டு அவிழ்த்தால் தெரியும்.

மெத்தெனப்படுத்தல் நித்திரைக்கு அழகு.
மேல்காற்று மேனியைவரட்டும்.
லங்கணம் பரம ஔஷதம்.
வயிற்றுவலியை நம்பலாகாது.
வயித்தியன் கைவிட்டால் வேறுவழி ஏது?
வாடைகாற்றுக்கு எதிர்நிற்கலாகாது.
விஷத்தைக்குடிக்கப் பாலாமா?
விஷத்தின்மேல் விஷம் விஷத்தைப் போக்கும்.
விஷம்தீர வைத்தியம் வேண்டும்.
விடாச்சுரத்துக்கு விஷ்ணுகிராந்தி.
விதிமுடிந்தவனைப் பாம்புகடிக்கும்.
வியாதிக்கு மருந்துண்டு, விதிக்கு மருந்துண்டா?
வியாதியிலும் மருந்துகொடிது.
விரயத்துக்கஞ்சி வியாதி ஒளிக்கலாகாது.
வில்வப்பழம்தின்பார் பித்தம்போக.
வீக்கமோ தூக்கமோ.
வீட்டில் இதம் வேம்பு அடியாகும்.
வெந்தபுண் வினைசெய்யாது.
வெளிச்சீர் உட்சீரைக்காட்டும் கண்ணாடி.
வேப்பெண்ணெய் நெய்யாகுமா மருந்தெண்ணெய்தானே.
வேனிற்காலத்திற்கு விசிறி.
வைசூரிவந்தவன்கிட்ட படுக்கலாகாது.
வைத்தியன் எல்லாருக்கும் பொது.
வைத்தியம் வேண்டாதார் உலகில் இல்லை.
வைத்தியமெல்லாம் நம்பிக்கையாற்பலிக்கும்.
வைத்தியனுக்கு அஞ்சவேண்டும்.
வைத்தியன்சொன்னது எல்லாம் மருந்து.
வைத்தியன்பாராத நோய் தீருமா.
வைத்தியத்தில் இரணவைத்தியம் நல்லது.

வைத்தியர்பலபேரானால் அனர்த்தம் அன்றே நேரும்.
வைத்தியனுக்குத் தன் அவிழ்தம்பலிக்காதாம்.
வைத்தியன் கொஞ்சமாகிலும் தெரியாதபேர் இல்லை.
வைத்தியன்சொல்லைக் கடக்கலாகாது.
வைத்தியன் மருந்திலும் கைமருந்தே நலம்.
வைத்தியன்பெரிதோ மருந்துபெரிதோ.
வைத்தியன் வீட்டில் குடியிருந்தால் நோய்தீராது.
வைத்தியசாஸ்திரம் சாஸ்திரங்களில் விசேஷம்.
வையத்தில் தெவிட்டாப்பொருள் அன்னமும் தண்ணீரும்.
வையத்திற்சிறந்த மருந்து தேன்.
வையத்திலுள்ளவரையிலும் தெய்வம்தொழு.

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பிழை. | திருத்தம். |
|---|---|---|
| 19 | மாக்கட்டு. | மாக்கட்டுக்கு. |
| 29 | விஸ்வாசம். | விச்வாஸம். |
| 37 | கிழகு. | கிழங்கு. |
| 45 | கத்திரி. | கத்தரி. |
| 49 | பகாவன். | பகவான். |
| ,, | உரியனராகிய. | உரியனவாகிய. |
| 53 | என்பிதோல். | என்புதோல். |

# HOME SERIES.

The Vernacular Picture Alphabet and other books of this Series can be obtained from the School Book and Vernacular Literature Society's and Christian Vernacular Education Society's Depots, Madras; Addison & Co., Mount Road; the Manager, *Times* Office; Mr. Kalyanarama Iyer, and other Book-sellers in Town as well as from the author, at the following rates:—

| | RS. | A. |
|---|---|---|
| Tamil Picture Alphabet | 0 | 5 |
| Alphabet in Rhyme—a Companion to the above | 0 | 1 |
| Telugu Picture Alphabet | 0 | 5 |
| Tamil Sheet Alphabet with Colored Pictures and Rhymes mounted on card board, for Girls' Schools and Infant Classes [nearly ready] | 1 | 8 |
| The Story of Pachai Ammal the Sick Nurse, in Tamil | 0 | 6 |
| Do. do. in Telugu [In the Press.] | | |
| Select Fables of Æsop in Tamil Verse with Illustrations | 0 | 10 |
| Do. do. with Music, cloth gilt [To be published. | | |
| Malayalam Picture Alphabet [To be published. | | |
| A Trip through Asia and Europe, in Tamil, with Colored Pictures. [To be published. | | |

*A liberal discount allowed to wholesale purchasers.*